


"உங்கள் சருமத்தை
லக்ஸ் டாய்லட் சோப்
குளுமையாகவும், அழகுடையதாகவும்
வைத்துக்கொள்ளுகிறது" என்று
சொல்லுகிறார்
ஹஸன்பானு

★ சினிமா நட்சத்திரங்கள் விரும்பும் அழகையளிக்கும் சோப் ! ★

LTS. 141-111-40 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED




மலர் 5 இதழ் 46 | 1946 ஜூன் 23 | வியய ஆனி 9





காவேரித் திருநாட்டில் செங்காட்டாங்குடி கிராமத்தில் மாமாத்திரர் குலத்தில் பிறந்த பரஞ்சோதியார் காஞ்சி பல்லவ சக்கரவர்த்தியின் சேனைத் தலைவராக வாதாபிக்குப் படையெடுத்துச் சென்று, அந்நகரை அடியோடு அழித்து விட்டுத் திரும்பியது பழந் தமிழ் நாட்டின் சரித்திரத்தில் மிகப் பிரசித்தி பெற்ற சம்பவமாகும். மேற்படி சம்பவத்தைக் குறித்துப் பெரிய புராணம் பின்வருமாறு குறிப்பிடுகிறது :—




மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாபித்
தொன்னகரம் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்துப்
பன்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும்
இன்னன எண்ணில கவர்ந்தே இகலரசன் முன்கொணர்ந்தார்.

[தண்டுபோய் : சேனையுடன் படையெடுத்துச் சென்று ; துளைநெடுங்கை வரையுகைத்து : நீண்ட துதிக்கைகளையுடைய மலைபோன்ற யானைப் படைகளை ஏவி ; பகட்டினமும் பரித் தொகையும் : ஏராளமான யானைகளையும் குதிரைகளையும் ; இகலரசன் : போரிற் சிறந்த அரசன் மாமல்லன்.]

வாதாபிப் பெரும் போருக்குப் பிறகு பரஞ்சோதியார் சிவபக்தி பூண்டு சிவனடியார்களுக்குத் தொண்டு செய்வதையே வாழ்க்கை இலட்சியமாகக் கொண்டு 'சிறுத்தொண்டர்' என்னும் காரணப் பெயரையும் அடைந்தார்.

திருச்செங்காட்டாங்குடி கிராமத்தில் இன்றைக்கும் சிறுத் தொண்டர் கோயில் இருக்கிறது. அவர் வாதாபியிலிருந்து கொண்டுவந்த விநாயகர் கோயிலும் இருக்கிறது.

ஹம்ஸத்வனி ராகத்தில் பாடப்படும் ''வாதாபி கணபதிம் பஜேஹம்'' என்னும் பிரசித்தி பெற்ற தீக்ஷிதர் கீர்த்தனத்தில், செங்காட்டாங்குடியிலுள்ள வாதாபி விநாயகர்தான் தோத்திரம் செய்யப்படுகிறார் என்பது ஆராய்ச்சியாளரின் கொள்கை.

நமது சித்திரக் கலைஞர் ''சந்திரா'' திருச்செங்காட்டாங்குடி கிராமத்துக்குச் சென்று தீட்டிக்கொண்டு வந்த அவ்வூரின் அழகிய தோற்றமும், அங்கேயுள்ள வாதாபி விநாயகரின் விக்கிரகமும் நமது இந்த இதழ் அட்டைக்குச் சோபை அளிக்கின்றன.

வாதாபி கணபதி எழுந்தருளியிருக்கும் சின்னஞ்சிறு கோயிலை உட்பக்கத்தில் காணலாம்.

சங்கீத ரத்ன ஸ்ரீ சௌடய்யா அவர்களின்

## மைசூர் ஐயனார் சங்கீத கலாசாலை நிதிக்காக



## ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

**உதவும் சங்கீதக் கச்சேரி**

ராவ்பகதூர் ஸ்ரீ வி. கோபால நாயுடுகாரு அவர்கள் தலைமையில்

கோயமுத்தூர்

## ராஜா தியேட்டரில்

21-6-46 திங்கட்கிழமை
மாலை 6-30 மணிக்கு



சங்கீத ரத்ன

டி. சௌடய்யா - பிடில்
கம்பாத்தி ராமநாதன் - மிருதங்கம்
கோயமுத்தூர் ராஜப்பையர் - கஞ்சிரா
ஆலங்குடி ராமச்சந்திரன் - கடம்



டிக்கெட்டுகள் : ரூ. 25, 10, 5

ஆதரவாளர்களுக்கும் நன்கொடையாளர்களுக்கும் சில இடங்கள் பிரத்யேகமாக ரிசர்வ் செய்யப்பட்டிருக்கின்றன.

டிக்கெட் கிடைக்குமிடம் :

Dr. வி. ஆர். சீனிவாச ராவ்,
ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்

---

குறிப்பு :—மேற்படி கலாசாலை அன்பர்கள் உதவியால் ஆரம்பிக்கப்பட்டு நடைபெற்று வருகிறது. மேலும் அதை அபிவிருத்தி செய்யவும் அதற்கென ஒரு கட்டிடம் கட்டவும் உத்தேசித்திருக்கிறேன். அன்பர்களும், கலாரஸிகர்களும் அதற்கு இக் கச்சேரி மூலம் பொருளுதவி செய்து உதவி புரிக்க வேணுமாய்க் கோருகிறேன்.

டி. சௌடய்யா,
ஸ்தாபகர் & பிரின்ஸிபால்

# வெஜிடபில் கதம்ப ஊறுகாய்




வெள்ளரிக்காய், இஞ்சி, பாவக்காய், கிரைத்தண்டு, வாழைத் தண்டு, கத்தரிக்காய், பச்சை மிளகாய், பச்சை மிளகு — சொல்லும்போதே வாயில் ஜலம் ஊறுகிறது — முதலியவை சேர்த்து கைபடாமல் ஜிஞ்ஜாமிருதமாகத் தயாரிக்கப்பட்டது. வாய்க்கு வெகு ஜோர். உடம்பிற்கு பரம சுகம். இன்றே உங்கள் தேவைக்கு எழுதவும். இரு சைஸ்களில் கிடைக்கும்.



தயாரிப்பவர்கள் :

## டி. எஸ். ஆர். & கோ.

வாஸனை திரவிய வியாபாரிகள்
கும்பகோணம்

மதராஸ் ஸிடி ஏஜெண்டுகள் :

**மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**
பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

ஸ்டாக்கிஸ்டு :

B. பாலபட்டாபி,
வைசியாள் தெரு, கோயமுத்தூர்.

கல்கி

மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 46

# என்ன சேதி?

## காஷ்மீருக்கு ஆபத்து

இந்தியா தேசத்திலேயே அழகிற் சிறந்த காஷ்மீர் சமஸ்தானத்துக்கு ஆபத்து வந்திருக்கிறது. அந்த ஆபத்து மேற்படி சமஸ்தானத்தின் அழகான அரசாங்கத்திலேயே ஏற்பட்டிருக்கிறது. நானது 1946-ம் ஆண்டில் பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு "எங்கள் சமஸ்தானத்தில் நுழையக் கூடாது!" என்று உத்தரவு போடக் கூடிய ஒரு சமஸ்தான சர்க்காரைப் பற்றி நாம் என்ன சொல்வது? உலகத்திலேயே மிக மௌடீக மான காரியத்துக்கு ஒரு நோபல் பரிசு கொடுப்பதாயிருந்தால் மேற்படி உத்தரவைப் போட்டவர்களுக்குக் கொடுக்கலாமல்லவா?

காஷ்மீர் சமஸ்தானத்து சர்க்கார் அத்தகைய உத்தரவைப் போட்டார்கள். போயும் போயும் பண்டித ஜவாஹர்லால் நேருவுக்குப் போட்டார்கள். பல வருஷங்களுக்கு முன்னால் ஜவாஹர்ஜி தமிழ் நாட்டுக்கு வந்திருந்தபோது புதுக்கோட்டை சமஸ்தானத்திலே அந்தமாதிரி ஒரு உத்தரவைப் போட்டு விட்டுத் திண்டாடிய விஷயம் காஷ்மீரில் உள்ளவர்களுக்குத் தெரியாது போயிருக்கிறது. எப்படியோ உத்தரவைப் போட்டார்கள்! ஜவாஹர்லால்ஜி நாலு நாளைக்குப் பிற்பாடு காஷ்மீர் போகக் கூடியவர். தட்சணமே கிளம்பினார். மிக முக்கியமான காங்கிரஸ் காரியக் கமிட்டி கூட்டம் நடந்து கொண்டிருக்கும்போதே கிளம்பிச் சென்றார். காஷ்மீர் எல்லையில் அவரைத் தடுத்த சூரச் சிப்பாய்களை இடித்துத் தள்ளிக் கொண்டு சமஸ்தானத்துக்குள் புகுந்தார். அப்படி இடித்துத் தள்ளிய போது பட்ட காயத்தையும் பொருட்படுத்தாமல் நடந்தார். மூன்று மைல் நடந்த பிறகு காரில் ஏறிக் கொண்டு விரைந்தார். காஷ்மீர் சர்க்கார் அவரைக் கைதி செய்திருப்பதாக இந்த இதழ் அச்சிடப்படும் தறுவாயில் செய்தி வந்திருக்கிறது.



மேற்படி சம்பவத்தின் பலனாக இனி என்னென்ன நடக்கப் போகிறதோ, சொல்ல முடியாது. அவ்வப்போது நேயர்கள் தினப் பத்திரிகையில் படித்துத் தெரிந்து கொள்வார்கள். மொத்தத்தில் மேற்படி மௌடீக உத்தரவினால் காஷ்மீர் சமஸ்தானத்துக்கே ஆபத்து வந்தாலும் நாம் ஆச்சரியப் படுவதற்கில்லை.

## மூடிக் கிடக்கிறது!

இந்தத் துணிப் பஞ்ச காலத்தில் பதினாயிரம் தொழிலாளிகள் வேலை செய்து வந்த பக்கிங்காம்—கர்னாடிக் ஆலை இரண்டு வாரமாக மூடிக் கிடக்கிறது! காரணம் வெகு சுலபமாக நிவர்த்தி செய்யக் கூடியது. ஆலையின் கேட் வாசற்படிகளில் காவலுக்காகப் பஞ்சாப்காரர்களை ஆலை முதலாளிகள் நியமித்திருக்கிறார்கள். தமிழ் பாஷை தெரியாத காரணத்தினால் அவர்களுக்கும் தொழிலாளிகளுக்கும் தகராறு அடிக்கடி ஏற்படுகிறது. ஒரு நாள் பஞ்சாபி காவற்

காரர்கள் தங்கள் கையில் வைத்திருக்கும் இரும்புத் தடிகளால் தொழிலாளிகளை அடித்து விட்டார்கள். இது காரணமாகத் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள். பஞ்சாப் காவலாளிகளை மாற்றினால் வேலைக்குத் திரும்புவோம் என்று சொல்கிறார்கள். சென்ற புதன்கிழமை 'பாலட்' எடுத்துப் பெரும்பான்மை வோட்டுக்களால் தீர்மானத்தை உறுதிப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

இந்தச் சின்ன விஷயத்தில் தொழிலாளிகளின் கோரிக்கையை நிறைவேற்றாமல் பிடிவாதம் பிடிக்கிறார்கள் மேற்படி ஆலையின் ஆங்கில முதலாளிகள்.

அந்தப் பிடிவாதம் காரணமாக ஆலையை மூடிப்போட்டிருக்கிறார்கள். மூடிப்போட்ட ஆலையைக் காவல் புரியப் போலீஸ் ஜவான்களை அனுப்பி விட்டுச் சுகமாகத் தூங்குகிறார்கள் நமது புதிய காங்கிரஸ் மந்திரிகள். அவர்களுடைய கையினாலாகாத்தனத்துக்கு இதைக் காட்டிலும் உதாரணம் வேண்டியதில்லை.

1939-ம் வருஷத்தில் மதுரை ஹார்வி மில் முதலாளிகள் தொழிலாளிகளுக்குப் பாடம் கற்பிப்பதற்காக ஆலையை மூடி 'லாக் அவுட்' செய்தார்கள். "உடனே ஆலையைத் திறந்து வேலை துவக்க வேண்டும்" என்று அப்போது பிரதம மந்திரியாயிருந்த ராஜாஜி 144-வது பிரிவின்படி உத்தரவு போட்டார். அதையும் இப்போது நடப்பதையும் நேயர்கள் ஒப்பிட்டுப் பார்ப்பார்களாக. "ராஜாஜி பிரதம மந்திரியாக வந்தால் மட்டும் என்ன சாதித்து விடுவார்?" என்று கேட்டுக்கொண்டிருந்த பிரகஸ்பதிகளும் கொஞ்சம் யோசித்துப் பார்க்கட்டும்.

# கோவை ரஸிகர்களுக்கு

சங்கீதக் கலையை சங்கீத ஆனந்தத்துக்காகவே ஆசிரயித்து நாத வித்தையை நாதோபாசனையாகக் கருதிப் போற்றி வளர்க்கும் தென்னாட்டுச் சங்கீத வித்வான்களுக்குள்ளே சங்கீத ரத்ன ஸ்ரீ சௌடய்யா முதன்மை ஸ்தானம் வகிக்கிறார். அவரைப் போன்ற நாதோபாசகர்கள் சங்கீத வித்தையில் தாங்கள் அபார தேர்ச்சியடைந்து பெயரும் புகழும் பொருளும் அடைவதுடனே திருப்தியடைவதில்லை. தக்க சீடர்களைத் தேடிப் பிடித்துத் தாங்கள் கற்ற வித்தையைப் பலருக்கும் பகிர்ந்து கொடுத்தால்தான் அவர்களுக்கு ஆத்ம திருப்தி ஏற்படுகிறது. இத்தகைய மேன்மைக் குணத்தைக் காலஞ்சென்ற காயகசிகாமணி முத்தையா பாகவதர் போன்ற மகா வித்வான்களிடம் கண்டோம். இன்று சங்கீத ரத்ன சௌடய்யாவிடம் காண்கிறோம்.



ஸ்ரீ சௌடய்யா தமது கலை உள்ளத்திலே பொங்கித் ததும்பிக் கரங்களின் வழியாக அமோகமாகப் பெருகும் நாத வித்தையைப் பகிர்ந்து கொடுத்துப் பெருக்கும் பொருட்டு மைசூரில் ஒரு சங்கீத கலாசாலை ஸ்தாபித்திருக்கிறார். திருவாங்கூரில் சமஸ்தான மன்னர் நடத்திவைக்கும் திருப்பணியை, சிதம்பரத்திலும் சென்னையிலும் விசுவகலாசாலைகள் மேற்கொண்டு நடத்தும் காரியத்தை, ஸ்ரீ சௌடய்யா தமது சொந்தப் பொறுப்பில் நடத்துவதற்குத் துணிந்து முன் வந்திருக்கிறார். இந்தச் சிறந்த சங்கீதக் கைங்கரியத்தின் உதவிக்காக நாளது ஜூன் மீ 24உ திங்கட்கிழமை கோயமுத்தூரில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி கச்சேரி செய்கிறார். இந்தக் கச்சேரிக்கு ஸ்ரீ சௌடய்யாவே வயலின் வாசிக்கிறார். ஸ்ரீமதி எம். எஸ். ஸின் இனிய குரலும், ஸ்ரீ சௌடய்யாவின் வாத்திய கீதமும் சேர்ந்து பெருகும் இன்னிசைப் பெருக்கைச் சென்ற மாதத்தில் பம்பாய் வாசிகள் கேட்டு ஆனந்தித்து மகிழ்ந்தார்கள். சென்னை மாகாணத்தில் முதன் முதலில் கோயமுத்தூர் சங்கீத ரஸிகர்களுக்கு அத்தகைய இசைப் பெருக்கைக் கேட்கும் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. அந்தச் சந்தர்ப்பத்தை அவர்கள் நன்கு பயன்படுத்திக் கொண்டு, ஸ்ரீ சௌடய்யாவின் சங்கீதத் திருப்பணிக்கும் உதவி செய்து மகிழ்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

---

***சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்கும் பரிசு பெற்றவர்: எஸ். நாகராஜன், 17. பெருமாள் கோயில் தெரு. திருநெல்வேலி டவுன்.***

# புது டில்லி நிகழ்ச்சிகள்

சென்ற வாரத்துப் புது டில்லி நிகழ்ச்சிகள் தேசத்தின் கவனத்தை யெல்லாம் கவர்ந்திருந்தன. பிரிட்டிஷ் மந்திரிகளும் வைஸராய் வேவலும் காங்கிரஸை யும் முஸ்லிம் லீகையும் சரிக்கட்டுவதற்காக சமயத்துக்கேற்ற வேஷந் தரித்து அபாரமாய் நடித்தனர்.

மகாத்மா காந்தி எப்போதும் போல் கடவுள் மீது பாரத்தைப் போட்டு நம்பிக்கை ஊட்டி வந்தார்.



காயிதே ஆஸம் ஜுருப் நின்று பேச்சிலே மிரட்டுறார். காரியத்தில் கைசோர்ந்திருர்.



-உம்மன்


கிரு அக்கிராசனர் ஆஸாதும் வருகிற
க்கிராசனர் நேருவும் தோளோடு தோள்
ர்ந்து காரியத்தைக் கவனித்தனர்.


படேல், "ஜனப் ஜின்னாவானாலும் பிரிட்டிஷ்
மந்திரிசபையானாலும் வேவலையானாலும்
யாராயிருந்தாலும் ஒரு
கை பார்ப்பதே சரி;"
என்று தம் கை வரிசை
யைக் காண்பித்துக்
கொண்டிருக்கார்.

ராஜாஜி, சிக்கல்
எடுக்கும் காரியத்தைத்
திறமையாகச் செய்து
வந்தார்.


இந்தியாவிலுள்ள
ரோப்பியர்கள்
ங்கே வெடி வைக்க-
ாம் என்று பார்த்துக்-
காண்டிருந்தனர்.


சீக்கியர்கள்
தங்களுக்கு அனு
கூலம் உண்டா என்று
ஆழத்தில் தூண்டில்
போட்டுப் பார்த்தார்கள்.

# நெய்யை வைத்துக்கொண்டு....

வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அழுகிறது என்று கேட்டிருக்கிறோம்; அநுபவத்திலும் பார்த்திருக்கிறோம். நெய்யை வைத்துக் கொண்டு நெய்க்கு அழுகிறது என்பதாகப் பழமொழி கேட்டதில்லை. ஆனால் அநுபவத்தில், நம் கண்முன்னால், அதை இப்போது பார்த்து வருகிறோம்.

இந்த நாட்டில் ஏராளமான பூமி இருக்கிறது; தரையைத் தோண்டினால் தண்ணீர் வருகிறது; ஏராளமான மழை பெய்கிறது; ஆறுகளும் ஏரிகளும் இருக்கின்றன. உழுவதற்கும் உழைப்பதற்கும் ஆசையும் ஆற்றலும் உள்ள கைகள் லட்சக் கணக்கிலே, கோடிக் கணக்கிலே இருக்கின்றன. ஆயினும் இந்த நாட்டில் இப்போது உணவுப் பஞ்சம் பிடுங்கித் தின்கிறது. பதினாறு அவுன்ஸ் ரேஷனைப் பன்னிரண்டு அவுன்ஸாகக் குறைத்து, அதுவும் சரியாகக் கிடைக்காமல், மக்கிய அரிசியும் உளுத்த கோதுமையும் உண்டு, ஜனங்கள் உடல் மெலிந்து பலமிழந்து வருகிறார்கள். இதற்குத்தான் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அழுவது என்று பெயர்.

இதோடு, நெய்யை வைத்துக் கொண்டு நெய்க்கு அழுகிற காரியமும் நம் கண் முன்னால் நடந்து கொண்டிருக்கிறது.

அது, தேசத்தில் ஏற்பட்டிருக்கும் துணிப் பஞ்சம் என்கிற விஷயந்தான்.

வெண்ணெயை நெய்யாக உருக்குவதற்குச் சிற்சில சாதனங்களும் சிறிதளவு உழைப்பும் வேண்டும். அடுப்பு வேண்டும்; தீ மூட்ட வேண்டும்; பாத்திரத்தில் போட்டு உருக்க வேண்டும்.

அம்மாதிரியே வளமான பூமியும் தண்ணீரும் இருந்தாலும் உணவுப் பொருள் உண்டாக்குவதற்கு வேறு சில சாதனங்கள் வேண்டும்.

ஆனால் நெய்யை வைத்துக் கொண்டு நெய்க்கு அழுகிறவர்களைப் பற்றி என்ன சொல்ல முடியும்? கடவுள் அவர்களுடைய கண்ணைத் திறக்க வேண்டும், அவர்களுக்கு அறிவைக் கொடுக்க வேண்டும் என்றுதான் பிரார்த்தனை செய்யலாம்.

சென்னை மாகாணத்தில் வேண்டியதற்கு மேலே பருத்தி விளைகிறது.

பருத்தியை நூலாக்குவதற்கு வேண்டிய 59 நூல் ஆலைகள் இருக்கின்றன.

நூலைத் துணியாக நெய்வதற்கு ஐந்து லட்சம் கைத்தறிகள் இருக்கின்றன; பத்து லட்சம் கைகளும் இருக்கின்றன.

கைத்தறிகளைப் பத்து லட்சமாகவும் அவற்றில் நெய்யும் கைகளை இருபது லட்சமாகவும் இலேசாகப் பெருக்கிக் கொள்ளலாம்.

கைத்தறிகளைத் தவிரத் துணி நெய்யும் ஆலைகள் வேறு இருக்கின்றன.

ஆனாலும், 'துணிப் பஞ்சம், துணிப் பஞ்சம்' என்கிறார்கள்.

ஆலைத் துணி விற்கும் கடைகளில் ஜனங்கள் கூட்டம் போட்டும், 'க்யூ' வரிசை நின்றும், நெருக்கி அடித்துக் கொண்டும், அடியும் குத்தும் பட்டுக் கொண்டும் துணி வாங்க வேண்டியிருக்கிறது.

கைத்தறித் துணியை ஒன்றுக்கு நாலு பங்கு விலை கொடுத்து வாங்க வேண்டியிருக்கிறது.

அப்படியும் எல்லாருக்கும் துணி கிடைப்பதில்லை; இன்றியமையாத அளவு கூடக் கிடைப்பதில்லை.

இதெல்லாம் நெய்யை வைத்துக் கொண்டே நெய்க்கு அழுகிற காரியத்தைத் தவிர வேறொன்றும் கிடையாது.

* * *

ஒரு காலத்தில் இந்த நாட்டில் அன்னியத் துணி பகிஷ்கார இயக்கத்தைத் தீவிரமாக நடத்தினோம்.

"அன்னிய நாட்டுத் துணிக்காக அறுபதுகோடி ரூபாய் அழுகிறோமே!" என்று பதினாயிரம் பொது மேடைகளில் புலம்பிக்கொண்டிருந்தோம்.

இரண்டாவது உலக மகா யுத்தம் வந்து சேர்ந்தது. வெளி நாடுகளிலிருந்து துணியும் நூலும் இறக்குமதியாவது அடியோடு நின்றது.

இந்தியாவுக்கு இது ஒரு பெரிய அதிர்ஷ்டந்தான்; ஆனால் அந்த அதிர்ஷ்டத்தைச் சரியானபடி பயன்படுத்திக் கொண்டோமா?

அன்னியத் துணியின் போட்டியில்லாத காலத்தில் தேசத்தில் நூல் உற்பத்தியையும் துணி உற்பத்தியையும் பெருக்கிக் கொண்டு அன்னியத்




இங்கே, மூன்று கெஜம் துணிக்காக ஜனங்கள் கடை வாசலில் மணிக் கணக்காய்க் காத்திருக்கிறார்கள்!..........

துணி இறக்குமதி அவசியமே இல்லாமல் செய்து கொண்டோமா?

அதுதான் இல்லை. தேசமெங்கும் "துணிப் பஞ்சம், துணிப் பஞ்சம்" என்று கூக்குரல் கேட்கிறது.

ஏழை எளிய மக்களும் மத்திய வகுப்பாரும் துணி வாங்குவதற்குச் சொல்ல முடியாத கஷ்டங்களை அனுபவிக்கிறார்கள்; அதோடு, கொள்ளை விலையும் கொடுக்கிறார்கள்.

"லங்காஷயர் துணி எப்போது வரும்? துணிப் பஞ்சம் எப்போது தீரும்?" என்று ஜனங்கள் கேட்கும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டது.

இதற்கெல்லாம் காரணம் இரண்டே இரண்டுதான்: (1) நூல் ஜவுளி ஆலை முதலாளிகளின் பேராசை; (2) நேற்று வரை இந்தியாவை ஆண்டு வந்த பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தின் திறமைக் குறைவு.

திறமைக் குறைவோடு கூட, பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் பொதுவாக முதலாளிகளின் சார்பில் இருப்பதும் இயற்கையே யல்லவா?

* * *

தற்சமயம் இந்தியாவின் நூல் ஜவுளி உற்பத்தியையும் வியாபாரத்தையும் கண்காணித்துக் 'கண்ட்ரோல்' செய்து வரும் ஸ்தாபனங்கள் இரண்டு இருக்கின்றன. ஒரு ஸ்தாபனம் அகில இந்திய சர்க்காரின் டெக்ஸ்டைல் இலாகா; மற்றொரு ஸ்தாபனம், பெரும்பாலும் ஆலை முதலாளிகள் அடங்கிய டெக்ஸ்டைல் கண்ட்ரோல் போர்டு.

இந்த இரண்டு ஸ்தாபனங்களும் சேர்ந்து இந்தியாவிலே துணி உற்பத்தியையும், விநியோகத்தையும் கண்காணித்து வருகின்றன.

அந்தக் கண்காணிப்பின் இலட்சணத்தினால்தான் தேசத்தில் துணிப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்கிறவர்கள் சிலர் இருக்கிறார்கள். ஆனால் அப்படி நாம் சொல்லவில்லை. அவர்கள் எவ்வளவோ கண்காணிப்புச் செய்தும் துணிப் பஞ்சத்தைப் போக்க முடியவில்லை என்று சொல்கிறோம்.

துணிப் பஞ்சத்தைச் சுலபமாக நிவர்த்திக்க முடியும் என்றும் சொல்கிறோம்.

சென்னை மாகாணத்தைப் பொறுத்த வரையில் துணிப் பஞ்சத்துக்கு அவசியமே இல்லை என்று நிரூபிக்கத் தயாரா யிருக்கிறோம்.

* * *

இந்திய சர்க்காரின் டெக்ஸ்டைல் இலாகாவும் டெக்ஸ்டைல் கண்ட்ரோல் போர்டு என்னும் முதலாளி போர்டுமாகச் சேர்ந்து நமது சென்னை மாகாணத்தில் ஒவ்வொரு இரண்டு கால் மனிதனுக்கும் சராசரியாய் வருஷம் 12 கெஜம் துணி வேண்டும் என்று தீர்மானித்திருந்தார்கள். அவ்வளவு துணி கொடுக்கக் கட்டாது என்று சமீபத்தில் தீர்மானித்து, தலைக்குப் பத்து கெஜம் போதும் என்று முடிவு செய்திருக்கிறார்கள். மகாராஜர்கள்!

இந்த மாகாணத்தில் கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த ஸ்திரீகள் 18

மூழப் புடவை அல்லது 16 முழப் புடவை கட்டிக் கொள்கிறார்கள்.

பத்து கெஜம் என்றால் 20 முழம் ஆகிறது. ஆகவே ஒரு பெண்மணிக்கு ஒரு வருஷத்தில் ஒரு சேலைதான்!

அதே மாதிரி கொஞ்சம் நாகரிகமடைந்த மனிதர்களுக்கு ஒரு வேஷ்டி, ஒரு சட்டை, ஒரு அங்கவஸ்திரந்தான் பத்து கெஜத்தில் ஆகும்!

இரண்டாவது சேலை கிடையாது; இரண்டாவது வேஷ்டி கிடையாது.

இரவில் போர்த்திக் கொள்ள ஒரு துப்பட்டி வேணுமென்றால் கிடையாது!

இப்படிப்பட்ட துணி தரித்திரத்துக்கு ஏதாவது அவசியம் உண்டா, தலைக்கு 12 கெஜமாவது கொடுக்க முடியாதா என்று கவனிக்கலாம்.

* * *

சென்னை மாகாணத்தின் தற்போதைய ஜனத்தொகை 5 கோடி.

இந்த 5 கோடி ஜனங்களுக்கும் சராசரி தலைக்கு 12 கெஜம் கொடுப்பதற்கு வருஷத்துக்கு 60 கோடி கெஜம் துணி வேண்டும்.

சென்னை மாகாணத்தில் உள்ள நூல் ஆலைகளில் இப்போது மாதம் 48,400 (பேல்) கட்டு நூல் உற்பத்தியாகிறது. இதில் 9800 கட்டு ஆலைகளிலேயே துணி நெய்வதற்கும் இராணுவத் தேவைக்கும் போய் விடுகிறது. பாக்கியுள்ள நூல் 38,600 பேல்.

சென்னை மாகாணத்தில் இப்போது 5 லட்சம் கைத்தறிகள் இருக்கின்றன. இந்த ஐந்து லட்சம் கைத்தறிகளும் மாதத்துக்கு 20 நாள் துணி நெய்வதற்கு வேண்டிய நூல் 38,880 கட்டு.

மாதம் 20 நாள் ஐந்து லட்சம் தறிகளில் 38,880 கட்டு நூல் நெய்யப்பட்டால், 6,99 84,000 கெஜம் துணி, அதாவது ஏறக்குறைய ஏழு கோடி கெஜம் துணி உற்பத்தியாகும்.

பன்னிரண்டு மாதத்தில் 84 கோடி கெஜம் துணி உற்பத்தியாகும்.

இதைத் தவிர இந்த மாகாணத்தில் ஆலைகளில் உற்பத்தியாகும் துணி வேறு இருக்கிறது.

உற்பத்தியாகும் ஆலைத் துணியின் ஒரு பகுதி வெளிநாடுகளுக்குப் போய்க் கொண்டிருக்கிறது. (இப்படிப் போகும் துணி எவ்வளவு என்பதை ஆலைகளும் சர்க்கார் இலாகாவும் வெளியிடுவதில்லை. வேண்டுமென்றே அதை மூடு மந்திரமாய் வைத்திருக்கிறார்கள்.)

இந்தியாவுக்கு வெளியேயுள்ள நாடுகளுக்கு ஏற்றுமதியாகும் துணி போக இம் மாகாண விநியோகத்துக்கென்று மாதம் 5,200 பேல் துணி கொடுக்கிறார்கள். வருஷத்துக்கு 62,400 கட்டு அதாவது 9 கோடி 36 லட்சம் கெஜம் மில் துணி கிடைக்கிறது.

ஆக மொத்தம் 93 கோடி கெஜம் ஆகிறது. எனவே, இப்போது இம் மாகாணத்தில் கைத்தறியிலும் ஆலையிலும் நெசவாகக் கூடிய துணியைக் கொண்டு தலைக்கு 12 கெஜம் மட்டும் அல்ல, 18 கெஜம் துணி கொடுக்கலாம்.

அப்படிச் செய்தால் துணிப் பஞ்சமே இல்லாமல் செய்து விடலாம்.

---




இங்கே, தொழிலாளிகளின் சிறு கோரிக்கையை மறுதளித்து முதலாளிகள் ஆலைக் கதவை இறுக மூடிப் பூட்டி யிருக்கிறார்கள். (காங்கிரஸ் மந்திரி சபை காவலுக்குக் கான்ஸ்டேபிள்களை அனுப்பி யிருக்கிறது!)



வேலை நிறுத்தம் செய்த தொழிலாளிகளின் மாபெரும் கூட்டம் ஆலை வாடியா பார்க்கில் நடந்து கொண்டிருக்கிறது.

சரி; அவ்வளவு சுலபமான காரியம் ஏன் நடைபெறவில்லை, ஏன் துணிப் பஞ்சம் தலைவிரித்தாடுகிறது, ஏன் துணி விலை கொள்ளை விலையாயிருக்கிறது, எதற்காக 12 கெஜம் கோட்டாவைப் புண்ணியவான்கள் 10 கெஜமாக ஆக்கியிருக்கிறார்கள் என்று பார்க்கலாம்.

ஐந்து லட்சம் கைத்தறிகளுக்கு மாதம் 20 நாள் வேலைக்கு மாதம் 38 880 கட்டு நூல் கொடுப்பதாக வைத்துக்கொண்டு மேலே கணக்கிட்டிருக்கிறோம். அதாவது மொத்த நூல் உற்பத்தியில் மில் துணிக்கு எடுத்துக் கொண்டது போக பாக்கி முழுவதும் கைத்தறிகளுக்கு வருவதாக வைத்துக் கொண்டிருக்கிறோம்.

ஆனால் தற்சமயம் அவ்வளவு நூல் கைத்தறிகளுக்குக் கிடைப்பதில்லை. இருபது நாள் வேலைக்குப் பதிலாக மாதம் பத்து நாள் வேலைக்குப் போதிய நூல்தான் கிடைக்கிறது.

மொத்தம் நமது மாகாணத்து நூல் ஆலைகளில் உற்பத்தியாகும் 48,400 கட்டு நூலில் 19,161 கட்டுத்தான் இந்த மாகாணத்துக் கைத்தறிகளுக்கென்று கொடுக்கிறார்கள்.

''கொடுக்கிறார்கள்'' என்றால், அவ்வளவும் நேரே கைத்தறிக்காரர்களுக்குப் போய்ச் சேர்வதில்லை.

ஆலை நூல் கைத்தறிக்குப் போய்ச் சேர்வதற்குள் இடையில் ஐந்து கை மாறுகிறது. அந்த ஐந்து பேரும் கள்ள மார்க்கெட்டுக்கென்று ஒவ்வொரு பங்கை எடுத்து வைத்துக்கொள்கிறார்கள். கடைசியில், கைத்தறிக்காரனிடம் ஓரளவு நூல் வருகிறது. அதை அவனும் கள்ள மார்க்கெட்டில் விற்கிறான்!

''இது என்ன வேடிக்கை? கைத்தறிக்காரன் நூலை ஏன் விற்கிறான்? யாருக்கு விற்கிறான்? விற்று விட்டு அவன் என்ன செய்வான்?'' என்ற கேள்விகள் எழலாம்.

''யார் எந்தக் கள்ள மார்க்கெட்டில் விற்றாலும் அந்த நூலை வைத்துக் கொண்டு என்ன செய்வார்கள்? கடைசியில் கைத்தறியில் நெசவாகித் தானே தீரவேண்டும்?'' என்றும் கேட்கலாம்.

உண்மைதான்; ஆலை நூல் கைத்தறி நெசவுக்கு என்ன நிலைமையில் வந்து சேர்கிறது என்பதற்கு ஓர் உதாரணம் பார்ப்போம்.

ஒரு தறிகாரனிடம் ஒரு கண்டு நூல் 12 ரூபாய் கண்ட்ரோல் விலைக்கு வந்து சேருகிறது. அதை அவன் நெசவு செய்தால் 3 ரூபாய்க் கூலியுடன் துணியை 15 ரூபாய்க்கு விற்கலாம். ஆனால் அந்த நூலை ஒரு வியாபாரி 18 ரூபாய்க்கு வாங்கத் தயாராயிருக்கிறான். எனவே, அந்தத் தறிகாரன் உழைப்பு மிச்சமென்று நினைத்து நூலை விற்று 6 ரூபாய் லாபம் சம்பாதிக்கிறான். இப்படியே பல கை மாறி 12 ரூபாய் நூல்

50 ரூபாய் வரை போகிறது. கடைசியாக, அதை நூல் கோட்டா கிடைக்காத தறிகாரன் வாங்கி நெசவு செய்து துணியை 55 ரூபாய் விலை வைத்து விற்கிறான். துணி அந்த விலைக்கும் போகிறது!

ஆலையின் உற்பத்தியாகும் நூலிலேயே திருட்டுத்தனமாய் எடுத்துவைத்துக் கள்ள மார்க்கெட்டுக்கு அனுப்பும் ஆலை முதலாளியிலிருந்து 'கோட்டா' நூல் வாங்கும் கைத்தறிக்காரன் வரையில் இப்படிக் கொள்ளை லாபம் அடிக்கிறார்கள்.

'மாஸ்டர் வீவர்' என்று சொல்லப்படுகிற குட்டித் தறி முதலாளி பத்துத் தறி, இருபது தறி வைத்துக் கொண்டு வேலை வாங்குகிறவர். இவருக்குக் கிடைக்கும் மொத்த கோட்டா நூலை இலேசில் இவர் உழைக்கும் தொழிலாளிகளுக்குக் கொடுப்பதில்லை. கொஞ்சம் கொடுத்து விட்டுப் பாக்கியை அதிக விலைக்கு 'கோட்டா' இல்லாத தறிகாரர்களுக்குக் கொடுக்கிறார்.

கடைசியாக எல்லா நூலும் கைத்தறிக்கு வந்து நெசவாகத்தான் ஆகிறது. ஆனால் துணி விலையானது, யானை விலை குதிரை விலையாகி விடுகிறது!

இந்தப் படுமோசமான நிலைமைக்கு முக்கிய காரணம், சென்னை மாகாணத்திலுள்ள ஐந்து லட்சம் கைத்தறிகளுக்கும் போதிய நூல் கொடுக்கப்படாமலிருப்பதுதான்.

* * *

மேலே நாம் சொன்னது போல், ஐந்து லட்சம் தறிக்கு 20 நாள் வேலைக்கு வேண்டிய நூல் மட்டும் கொடுத்தால், நாட்டிலே துணிப் பஞ்சம் இல்லை; கள்ள மார்க்கெட் இல்லை; கொள்ளை விலையும் இல்லை.

அப்படிக் கொடுப்பது சாத்தியமான காரியம். ஏனெனில், நமது மாகாணத்தில் நூல் உற்பத்தியில் மில் துணிக்கு வேண்டியது போக 38,600 கட்டு நூல் பாக்கியிருக்கிறது. ஆனால் இதில் பாதி, ஏறக்குறைய 19,000 கட்டுக்கள், இப்போது வெளி மாகாணங்களுக்குப் போய்க்கொண்டிருக்கின்றன.

தனக்கு மிஞ்சித் தர்மம் என்ற பழமொழியின்படி மேற்படி நூலை இந்த மாகாணத்திலேயே நிறுத்திக் கொள்ளலாம்.

அல்லது பிற மாகாணங்களின் மீது கருணை பொங்கி 19,000 கட்டு நூலையும் அனுப்பத்தான் வேண்டுமென்றால் அதற்கும் வழி இருக்கிறது.

இம் மாகாணத்தில் இப்போதுள்ள நூல் ஆலைகளிலேயே சரியாக வேலை நடக்கும்படி செய்தால் உற்பத்தியைப் பெருக்கலாம். மூன்று 'ஷிப்ட்' வைத்து வேலை செய்தால் நூல் உற்பத்தியை மூன்றில் ஒரு பங்கு அதிகமாக்கலாம்.

இப்போது வெளி மாகாணத்துக்கு ஏற்றுமதியாகும் 19 ஆயிரம் கட்டு நூலையும் கட்டாயம் அதிகப்படி உற்பத்தி செய்யலாம்.

* * *

நூல் உற்பத்தியும் துணி உற்பத்தியும் பெருகுவதற்கு முக்கிய தடையாயிருப்பவை ஆலை முதலாளிகளின் பேராசையும் மௌடீகமுந்தான்.

அந்த முதலாளிகள்தான் இந்தியா கவர்ன்மெண்டின் ஜவுளி உற்பத்தி விநியோகக் கொள்கையை நிர்ணயிக்கிறார்கள்.

சில ஆலைகள் சமீப காலத்தில் அடைந்திருக்கும் லாபத்தைப் பாருங்கள்.

சென்னையிலுள்ள பக்கிங்காம்—கர்னாடிக் ஆலைக்கு 1944-ம் வருஷத்தில் 2 கோடி 31 லட்சம் ரூபாய் லாபம் கிடைத்தது. இது மேற்படி ஆலையில் போட்டிருக்கும் மூலதனத்துக்கு இரண்டு மடங்கு.

மதுரை மில்லுக்கு சென்ற மூன்று வருஷங்களில் நிகர லாபம் 3 கோடி கிடைத்திருக்கிறது.

பம்பாய் நகரத்திலுள்ள 61 ஆலைகளுக்கு 1943-ம் வருஷத்தில் 36 கோடி 50 லட்சம் ரூபாய் நிகர லாபம் கிடைத்திருக்கிறது.

1940-முதல் 1944-க்குள் பம்பாய் ஆலைகளில் போடப்பட்ட முதலைப்போல் ஆறரை மடங்கு லாபம் கிடைத்திருக்கிறது.

இந்த லாபமெல்லாம் கள்ள மார்க்கெட் லாபம் சேராமல் நியாயமான கணக்குப்படி வரி கொடுத்த பிறகு கிடைத்த லாபம்!

இந்தமாதிரி சொற்ப காலத்தில் அதிக லாபம் கொடுத்த பெரிய தொழில் உலகத்திலேயே வேறு எங்கும் இருக்க முடியாது.

ஆகையினாலேதான் ஆலை முதலாளிகள் நூல் உற்பத்தி, துணி உற்பத்தியைப் பெருக்கும் விஷயத்தில் அலட்சியமாயிருக்கிறார்கள்.

அலட்சியத்தோடு, உற்பத்தியைப் பெருக்குவதற்கு முட்டுக் கட்டையும் போடுகிறார்கள். உற்பத்தி அதிகமானால் துணிப் பஞ்சம் ஏது? துணிப் பஞ்சம் தீர்ந்தால் கொள்ளை லாபம் ஏது? —

இதுபோன்ற பரோபகார சிந்தை உள்ள ஆலை முதலாளிகள்தான் இந்திய சர்க்காரின் துணி கண்ட்ரோல் போர்டில் இருக்கிறார்கள்.

அவர்கள்தான் இந்திய சர்க்காரின் உடந்தையும் ஒத்தாசையும் பெற்றுத் துணிப் பஞ்சத்தை உண்டாக்கியிருப்பதுடன் பஞ்சம் நிராமளும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

*　　*　　*

துணிப் பஞ்சத்தைத் தீர்க்கலாம்; நிச்சயம் தீர்க்கலாம்; இந்த மாகாணவாசிகளுக்குச் சராசரி 18 கெஜமும் அதற்கு மேலும் துணி கிடைக்கச் செய்யலாம். நியாயமான விலைக்கும் கிடைக்கச் செய்யலாம்.

அதற்கெல்லாம் ஒரே ஒரு வழி—நிச்சயமான வழி—இருக்கிறது.

சென்னை மாகாணத்திலுள்ள நூல் ஆலைகளையும் துணி ஆலைகளையும் காங்கிரஸ் சர்க்கார் எடுத்துக்கொண்டு நடத்த வேண்டும்.

அப்படி நடத்தினால், ஆலை நூல் உற்பத்தியைக் குறைந்த பட்சம் மூன்றில் ஒரு பங்கு அதிகமாக்கலாம்.

ஐந்து லட்சம் கைத்தறிக்காரர்களுக்கும் வேண்டிய நூல் கொடுக்கலாம்.

நூலும் துணியும் கள்ள மார்க்கெட்டுக்குப் போகாமல் தடுக்கலாம்.

தறிகாரர்களுக்கு நிறை போட்டு நூல் கொடுத்துப் பதிலுக்கு நிறை போட்டுத் துணி வாங்கி நியாயமான கூலி கொடுக்கலாம்.

பொது ஜனங்களுக்கு நியாயமான விலைக்குப் போதுமான துணிமணி கிடைக்கும்படி செய்யலாம்.

ஆலைகளையெல்லாம் சர்க்கார் பறிமுதல் செய்துவிட வேண்டுமென்று நாம் சொல்லவில்லை.

ஆலைகளின் முதலாளிகள் போட்ட மூலதனத்துக்கு நியாயமான வட்டி அவர்களுக்குக் கொடுத்துவிடலாம்.

அவ்விதம் முதலாளிகளுக்கு வட்டி கொடுத்து, தொழிலாளிகளுக்கு நல்ல கூலி கொடுத்து, ஜனங்களுக்கு நியாய விலைக்குத் துணியும் கொடுக்கலாம்.

இப்படியெல்லாம் கொடுத்த பிறகு சென்னை சர்க்கார் வருஷம் 10 கோடி முதல் 15 கோடி வரையில் லாபமும் சம்பாதித்துக் கொள்ளலாம்.

*　　*　　*

நமது மாகாணத்துப் புதிய காங்கிரஸ் மந்திரிகள் மேற்படி திட்டத்தைக் கருணை கூர்ந்து (பொது மக்களிடம் கருணை கூர்ந்து) கவனிக்குமாறு கோருகிறோம். கவனித்துக் காரியத்திலும் கொண்டு வரக்கூடிய அறிவையும் ஆற்றலையும் அவர்களுக்கு அளிக்குமாறு கடவுளைப் பிரார்த்திக்கிறோம்.

# அரசியல் அரங்கம்

"பூரண சுதந்திரம்" எழுதுவது

## புது மந்திரிகள்

சென்னை மந்திரி சபையில் பாக்கியிருந்த இரண்டு மந்திரி பதவிகளுக்கும் நியமனம் பூர்த்தியாகி விட்டது. ஸ்ரீ ஆர். ராகவமேனனும் ஸ்ரீ பிக்கண்ண வீராசாமியும் நியமிக்கப்பட்டிருப்பதாக 17—6—46 மாலைப் பத்திரிகைகளில் அறிக்கை வெளியாயிற்று. இந்த இரண்டு பேரில் ஸ்ரீ ராகவமேனன் மலையாளத்தைச் சேர்ந்தவர். நீண்ட தாமதத்துக்குப் பிறகு வெளியான இந்த நியமனத்துக்குப் பின்னால், மறைமுகமாக ஒரு பெரிய மகா பாரத அரசியல் சூழ்ச்சிப் போர் நடந்திருக்கிறது.

ஆரம்பத்தில் மேற்படி பதவிக்கு ஸ்ரீ மாதவமேனன் நியமிக்கப்படுவார் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஏனெனில், ராஜாஜி பிரதம மந்திரியாக வரக்கூடாது என்று பற்பல சூழ்ச்சிகள் செய்த தென்னாட்டுப் பிரமுகர்களுக்குள்ளே ஸ்ரீ மாதவமேனன் முதன்மையான ஒருவர். சென்ற மாதம் வரையில் கேரள மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவராயிருந்தவர். டில்லிக்கு அழைக்கப்பட்டுச் சென்ற மூன்று மாகாணத் தலைவர்களிலே அவரும் ஒருவர்.

## பலிக்காத சூழ்ச்சி

தமிழ்நாட்டுக் காங்கிரஸ் நிர்வாகக் கோஷ்டியார் ஸ்ரீ மாதவமேனனைப் பிரதம மந்திரியாகவே கொண்டுவந்து விடுவதென்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்ததாக வதந்தி உலாவிற்று.

ராஜாஜியை ஒருவிதமாக ஒழித்துக் கட்டிய பின்னர், பிரகாசம்காருவையும் மூலையில் உட்கார்த்திவிட்டு ஸ்ரீ மாதவமேனனுக்குப் பட்டம் கட்டிவிட அவர்கள் தீர்மானித்திருந்தார்களாம். ஸ்ரீ மாதவமேனனைப் பிரதம மந்திரியாக வைத்துக் கொண்டால் தங்களுடைய கையின் கீழ்ப் பொம்மையாக அவரை ஆட்டி வைத்து இஷ்டம்போல் காரியங்களை நடத்திக்கொண்டு போகலாம் என்பது அவர்கள் அந்தரங்க நோக்கம்.

ஆனால் இந்த யோசனைக்கு ஸ்ரீ பிரகாசத்தின் பிடிவாதம் குறுக்கே நின்று தொலைத்தது. ராஜாஜி விஷயத்தில் மகாத்மா-ஆஸாத்-படேல் புத்திமதியை உதறித் தள்ளியவர்கள், "பிரகாசம்காரு மந்திரியாக வருவதை மகாத்மா ஆதரிக்கவில்லை" என்று சொல்லிப் பயமுறுத்திப் பார்த்தார்கள். அது பலிக்கவில்லை. "யார் என்ன சொன்னாலும், எது எப்படிப் போனாலும், காந்தி மகாத்மாவே எதிர்த்தாலும் நான் தலைமைப் பதவிக்குப் போட்டியிட்டே தீர்வேன்!" என்று ஸ்ரீ பிரகாசம்காரு சொல்லி விட்டார்.

ஆனால் ஸ்ரீ பிரகாசத்துக்குப் போட்டியாக ஸ்ரீ மாதவமேனனை நிறுத்துவதற்குத் துணிச்சல் இல்லை. நிறுத்தினால் நிச்சயம் தோல்வி என்று தெரியும். எனவே, பாவம், ஸ்ரீ முத்துரங்க முதலியாரை அம்பலத்துக்கு இழுத்தார்கள். ஸ்ரீ முதலியார் தலைவரானவுடனே, காலஞ்சென்ற ஸர் பி. டி. தியாகராஜச் செட்டியாரைப் பின்பற்றி, அவர் கட்சித் தலைவராக மட்டும் இருந்து கொண்டு ஸ்ரீ மாதவ மேனனைப் பிரதம ராக்கும்படி செய்யலாம் என்று எண்ணியிருந்தார்கள்.

இந்த எண்ணமும் வீணாய்ப்போயிற்று. ஏனெனில் ஸ்ரீ மாதவமேனன் மீது தமிழ்நாட்டிலே சிலருக்குத்தான் அபார அபிமானமே தவிர, கேரள நாட்டுப் பிரதிநிதிகள் அவரைக் கொஞ்சமும் விரும்பவில்லை. அவர்களில் பெரும்பாலோர் ஸ்ரீ பிரகாசத்துக்கு வோட்டுப் போட்டு ஸ்ரீ முதலியாரைத் தோற்கப் பண்ணிவிட்டார்கள்.

ஸ்ரீ முத்துரங்க முதலியாரைப் பகிரங்கமாக ஆதரித்த ஸ்ரீ மாதவ மேனன், பிரகாசம்காரு வெற்றியடைந்ததும் தமது தவறை உணர்ந்தார். ஸ்ரீ பிரகாசத்தின் வெற்றியைக் குறித்துத் தமது அபரிமிதமான மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டு, தாம் எப்போதும் அவருடைய பரம பக்தனாயும் தாஸானு தாஸனாயும் நடந்து வந்திருப்பதைக் குறிப்பிட்டுத் தம்மைக் கைவிட்டுவிடக் கூடாதென்று அழாக் குறையாக முறையிட்டுக் கொண்டார். இந்த முறையீடு, சுய கௌரவம் வாய்ந்த மலையாளிகள் எல்லாரையும் தலை குனியச் செய்தது.

## பெரும் ஏமாற்றம்

ஸ்ரீ மாதவமேனன் பிரதம மந்திரியாகாவிட்டாலும் அவரை வெறும் மந்திரியாகவாவது ஆக்கிவிடுவதென்று தமிழ்நாடு கோஷ்டியார் அபாரப் பிரயத்தனம் தொடங்கி, ஸ்ரீ பிரகாசம்காருவை ரொம்ப ரொம்ப நெருக்கினார்கள். மேற்படி கோஷ்டியின் பொர்சை நம்பி, மந்திரி சபை நியமனத்தன்று ஸ்ரீ மாதவமேனனும் ஆந்திர கேசரியின் வீட்டுக்குப் போனார். ஆனால் அங்கே அவருடைய நியமன விஷயம்

நிச்சயமாக வில்லை யென்று தெரிந்து கொண்டார். ஸ்ரீ மாதவ மேனனுக்குப் பெரும் ஏமாற்றம். அதைக் காட்டிலும் தமிழ் நாடு கோஷ்டிக்கு அதிக ஏமாற்றம்.

எனவே, ஸ்ரீ பிரகாசத்துக்கு ஒரு பாடம் கற்பித்து எச்சரிக்கை செய்வதென்று தமிழ்நாடு கோஷ்டியார் தீர்மானித்தனர்.

சட்டசபை அக்கிராசனர் தேர்தலில் ஸ்ரீ டி. பிரகாசத்தின் வலது கை போன்ற ஸ்ரீ தென்னடி விசுவநாதருக்கு வோட்டுப் போடாமல் அவரைத் தோற்கடித்தார்கள். ஆனால் இதனுடைய விளைவும் அவர்கள் எதிர்பார்த்ததற்கு நேர்மாறாக முடிந்தது.

எச்சரிக்கையின் பலனாக ஸ்ரீ பிரகாசம் சீர்திருந்துவதற்குப் பதிலாக அவருடைய பிடிவாதம் அதிகமாயிற்று! "இப்படியா செய்தீர்கள்? நல்லது; ஒரு கை பார்க்கிறேன்!" என்று சொன்னார் ஆந்திர கேசரி. அப்படியே ஒரு கை பார்த்து விட்டார்!

ஸ்ரீ மாதவ மேனனை மூலையில் உட்கார்த்தி வைத்து விட்டு, ஸ்ரீ ஆர். ராகவ மேனனை உதவி உணவு மந்திரியாக நியமனம் செய்து விட்டார்!

## நல்ல நியமனம்

**ம**ந்திரி பதவிக்கு ஸ்ரீ ராகவ மேனனுடைய நியமனம் நல்ல நியமனம் என்பதைப் பற்றிச் சந்தேகமில்லை. அதனால் காங்கிரஸ் மந்திரி சபைக்கே அதிக பலமும் கௌரவமும் ஏற்படக் கூடும்.

ஸ்ரீ ராகவமேனன் எம்.ஏ., பி.எல்., பாலக்காட்டில் நல்ல வருமானம் உள்ள பிரபல வக்கீல். அந்த வருமானத்தைத் தியாகம் செய்து பல தடவை சிறை புகுந்தவர். பல வருஷ காலமாக நீடித்த தேசத் தொண்டு செய்து வருகிறவர். கட்சிச் சண்டைகளில் தலையிடாதவர். மலையாள ராஜ்யத்தில் பொதுவாக மிகவும் நல்ல பெயர் வாங்கியவர்.

மந்திரி பதவிக்காக ஸ்ரீ ராகவமேனன் சுயமரியாதைக்குப் பங்கம் செய்து கொண்டு ஸ்ரீ பிரகாசத்தைக் காக்கை பிடிக்கவில்லை. மந்திரி பதவி அவரைத் தேடி வந்தது என்றே சொல்ல வேண்டும். தேடி வந்த பதவியை அவர் நன்கு வகிப்பார் என்பதிலும் சந்தேகம் இல்லை.

## 'பயில்' உற்பத்தி பெருகுகிறது!




பிரதம மந்திரி ஸ்ரீ பிரகாசம்காரு உணவு இலாகாவை எடுத்துக் கொண்டது முதல், பயிர் உற்பத்தி பெருகா விட்டாலும், 'பயில்' உற்பத்தி அபாரமாகப் பெருகி வருகிறதாம்!

# வெடிப்புள்ள டயர்களுடன் ஏன் பரீக்ஷை பார்க்கிறீர்கள்!

பலஹீனமான டயர்கள், ஒவ்வொரு வருஷமும் ஆயிரக்கணக்கான அபாயகரமுள்ள விபத்துக்களையும் உயிர்ச்சேதங்களையும் விளைவிக்கின்றன. உயர்தர பயர்ஸ்டோன் 'கம்—டிப்பிடு' டயர்களைக் கொண்டு, உங்கள் காருக்கும், பிரயாணிகளுக்கும் போதிய பாதுகாப்பளியுங்கள். இந்தப் பிரத்யேகமான 'கம்-டிப்பிங்' முறை, கூடுதலான விலையில்லாமல், பாதுகாப்புடன் அதிக மைல்கள் ஓடி உழைக்கவும் உறுதி யளிக்கிறது.



## Firestone
## பயர்ஸ்டோன்

**டயரில் கம்-டிப்பிடு இது ஒன்றுதான்**

பயர்ஸ்டோன் டயர் & ரப்பர் கோ., ஆப் இந்தியா, லிமிடெட்.

பம்பாய் ★ மதராஸ் ★ கல்கத்தா ★ பெங்களூர் ★ நாகப்பூர்
லாகூர் ★ டில்லி ★ காராச்சி ★ கொழும்பு ★ லக்னௌ



வேர்க்குரு
உபத்திரவம்
ஒழிக

ஸின்டால்
பவுடர் உடனே
குணமளிக்கும்




எல்லா கெமிஸ்டுக
ளிடமும் கிடைக்கும்

**ஸிண்டெடிக் (இந்தியா) லிட்.**

12, ஸ்லேட்டர் ரோட்,
பம்பாய் 7 டெலிபோன்: நெ. 42650

லண்டன் ஆபீஸ்:
128/129, சீப்ஸைட், லண்டன் E. C. 2

சென்னை மாகாணத்துக்கு சோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
கே. கே. பிள்ளை & கம்பெனி, ராயப்பேட்டை, சென்னை

E—PSY

# சிவகாமியின் சபதம்

## கல்கி

### அத்தியாயம் 50

## பௌர்ணமி சந்திரன்

இந்த மண்ணுலகம் தோன்றிய காலத்திலிருந்து மாதம் ஒரு தடவை பூரண சந்திரன் உதயமாகி நீலவானத்தில் ஜொலிக்கும் வைர நட்சத்திரங்களினிடையே பவனி வருகிறது.

ஒவ்வொரு பௌர்ணமியன்றும் வான வீதியில் பவனி வரும் பூரண சந்திரன் கடந்த ஒரு மாதத்துக்குள்ளே பூவுலகில் எத்தனையோ அதிசயமான மாறுதல்கள் நிகழ்ந்திருப்பதைப் பார்த்துக் கொண்டு வருகிறது.

எனவே, மண்ணுலகில் அடிக்கடி நிகழும் மாறுதல்கள் பூரண சந்திரனுக்கு அதிகமான ஆச்சரியத்தை அளிக்க முடியாதுதான்.

என்றாலும், இன்றைக்குச் சரியாக ஆயிரத்து முன்னூற்று நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் (கி. பி. 642-ல்) மார்கழி மாதத்தில் உதித்த பூரண சந்திரன் வாதாபி நகரம் இருந்த இடத்துக்கு மேலாக வந்தபோது சிறிது நேரம் ஆச்சரியத்தினால் ஸ்தம்பித்து நின்றுவிட்டு, ஒரு பெருமூச்சுடனேதான் அப்பால் நகர்ந்திருக்க வேண்டும்.

கார்த்திகை மாதத்துப் பௌர்ணமியன்று பூரண சந்திரன் வாதாபி நகருக்கு மேலாக வந்தபோது அந்த மாநகரின் தோற்றத்துக்கும் அடுத்த மார்கழி பௌர்ணமியன்று அங்கே தோன்றிய காட்சிக்கும் அவ்வளவு பெரிய வித்தியாசம் இருந்தது. அந்த வித்தியாசமானது சந்திரனுக்கு இருதயம் என்பதாக ஒன்றிருந்தால், அதைச் சுக்கு நூறாக உடையச் செய்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

போன பௌர்ணமியன்று அந்த வாதாபி நகரத்தின் மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் சந்திரனையே தொட்டுவிட முயல்வதைப் போல் கம்பீரமாக எழுந்து நின்றன. வானத்து நட்சத்திரங்களோடு போட்டியிடுவன போல் நகரெங்கும் தீபங்கள் ஜொலித்தன. ஐசுவரியத்தில் பிறந்து ஐசுவரியத்தில் வளர்ந்த ஆடவரும் பெண்டிரும் சகலாபரண பூஷிதர்களாக அந்தப் பெருநகரின் விசாலமான வீதிகளில் மதோன்மத்தங் கொண்டு உலாவினார்கள். அலங்கரித்த யானைகளும் அழகிய குதிரைகளும் தந்தச் சிவிகைகளும் தங்க ரதங்களும் மோகன வெண்ணிலவிலே ஒளி வீசித் திகழ்ந்தன. விண்ணை மெட்டும் மாளிகைகளின் மேல் உப்பரிகைகளில் வெண்ணிலாவுக்கு இன்னும் வெண்மையை அளித்த தவள மாடங்களில் மன்மதனையும் ரதியையும் ஒத்த காளைகளும் கன்னியர்களும் காதல் புரிந்து கொண்டிருந்தார்கள். தேவாலயங்களில் ஆலாட்ச மணிகள் ஒலித்தன. அரண்மனையில் கீதவாத்தியங்களின் இன்னிசை கிளம்பிற்று. நடன மண்டபங்களில் சதங்கைகள் சப்தித்தன. கடைவீதிகளில் பொது ஜனங்களின் கலகலத்வனி எழுந்தது. அகில் புகையின் மணமும் சந்தனத்தின் வாசனையும் நறுமலர்களின் சுகந்தமும் எங்கெங்கும் பரவியிருந்தன.

கார்த்திகை பௌர்ணமியன்று மேற்கண்டவாறு கந்தர்வபுரியாகக் காட்சியளித்த வாதாபி நகரம் இருந்த இடத்தில் இன்றைக்கு, அதாவது மார்கழி பௌர்ணமியன்று, சிற்சில குட்டிச் சுவர்கள் நின்றன. மற்ற இடத்திலெல்லாம் கரியும் சாம்பலும் புகையேறிய கல்லும் மண்ணும் காணப்பட்டன. சில இடங்களில் அவை குப்பல் குப்பலாகக் கிடந்தன; சில இடங்களில் பரவிக் கிடந்தன.

இடிந்து விழாமல் புகையினாலும் தீயினாலும் கறுத்துப்போய் நின்ற குட்டிச் சுவர்களின் ஓரமாகச் சிற்சில மனிதர்கள்,—உயிர் பெற்று எழுந்த

பிரேதங்களையும் பேய் பிசாசுகளையும் ஒத்த மனிதர்கள்,—ஆங்காங்கு திரிந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் சிலர் எங்கே போகிறோம் என்ற எண்ணமே இல்லாமல் பிரமை கொண்டவர்கள் போல் நடந்தார்கள். வேறு சிலர் ஆங்காங்கு உட்கார்ந்து கரியையும் மண்ணையும் கிளறிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் யாரைத் தேடினார்களோ, எதைத் தேடினார்களோ, யாருக்குத் தெரியும்?

• • •

வாதாபி நகர் இருந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்தில், இடிந்தும், தகர்ந்தும் கிடந்த கோட்டை மதிளுக்கு அப்பால், அந்த மார்கழி பௌர்ணமி சந்திரன் முற்றிலும் வேறு விதமான மற்றொரு காட்சியைப் பார்த்தது. லட்சக் கணக்கான பல்லவ—பாண்டிய வீரர்கள் வெற்றிக் கோலாகலத்திலும் களியாட்ட ஆரவாரங்களிலும் ஈடுபட்டிருந்தார்கள். அவர்கள் படையெடுத்து வந்த காரியம் யாரும் எதிர்பார்த்ததைக் காட்டிலும் சுலபமாக நிறைவேறி மகத்தான வெற்றி கிடைத்த காரணத்தினால் அவர்களுக்கேற்பட்ட மதோன்மத்தம் ஒரு பக்கம், வாதாபி நகரத்தின் கொள்ளையில் அவரவர்களுக்குக் கிடைத்த பங்கினால் ஏற்பட்ட உற்சாகம் ஒரு பக்கம், இவற்றோடுகூட இந்தப் பாழாய்ப்போன மயான பூமியில் — அவர்களாலேயே மயானமாக்கப்பட்ட பிரதேசத்தில் — இன்னும் ஒரு முழு நாள்தான் இருக்க வேண்டும், — அதற்கு அடுத்த தினம் சொந்த நாட்டுக்குப் புறப்படப் போகிறோம் என்ற எண்ணமானது அவர்களுக்கு அளவில்லாத எக்களிப்பை உண்டுபண்ணி இரவெல்லாம் தூக்கமின்றிக் கோலாகலமான களியாட்டங்களில் ஈடுபடும்படி செய்திருந்தது.

அந்த வெற்றி வீரர்களிலே சிலர் ஆடிப்பாடினார்கள்; சிலர் இசைக் கருவிகளிலிருந்து பலவகை அபஸ்வரங்களைக் கிளப்பினார்கள்; சிலர் கும்பலாக உட்கார்ந்து கதை கேட்டார்கள்; சிலர் வாதாபி யுத்தத்தில் தாங்கள் செய்த வீர பராக்கிரமச் செயல்களைப் பரஸ்பரம் சொல்லிப் பரிமாறிக் கொண்டிருந்தார்கள்; சிலர் மார்கழி மாதத்துக் குளிரைப் போக்கிக் கொள்வதற்காக எரிகிற வீடுகளிலிருந்து பிடுங்கிக் கொண்டு வந்த கட்டைகளைப் போட்டுக் கொளுத்திக் கொண்டும் தீயைச் சுற்றி உட்கார்ந்து கொண்டும் குளிர் காய்ந்தார்கள்.

அநேகர் வாதாபியிலிருந்து அவரவர்கள் கொள்ளையடித்துக்கொண்டு வந்திருந்த செல்வங்களைச் சேர்த்து வைத்துக் கொண்டு பூதம் காப்பது போல் காத்து வந்தார்கள். இப்படிக் கொள்ளை கொண்ட பொருளை அதி ஜாக்கிரதையாய்ப் பாதுகாத்தவர்களுக்குள்ளே, — சற்றுக் கவனித்துப் பார்த்தோமானால்,—நமக்குத் தெரிந்த வயோதிக வீரர் ஒருவரைக் காணலாம். சோழ மன்னர் பரம்பரையைச் சேர்ந்த செம்பியன் வளவன்,—மங்கையர்க்கரசியின் அருமைத் தந்தைதான் அவர். தாம் காஞ்சியிலிருந்து புறப்பட்டு வந்த பிறகு தமது மகளுக்கு நேர்ந்த அரும் பெரும் பாக்கியத்தை அறியாதவராய், அவளுடைய திருமணத்தின்போது ஸ்ரீதனம் கொடுப்பதற்கென்று, எரிந்து கொண்டிருந்த வாதாபி நகரிலிருந்து மிக்க பரபரப்புடனும் சுறுசுறுப்புடனும் ஏராளமான முத்துக்கள், மணிகள், ரத்தினங்கள், தங்கம் வெள்ளி ஆபரணங்கள், ஆகியவற்றை அவர் கொண்டு வந்து சேர்த்திருந்தார். அவற்றையெல்லாம் எப்படி ஊருக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பது என்ற கவலை அந்தப் பெரியவரை இப்போது பிடுங்கித் தின்றது. தமது பக்கத்திலிருந்த வீரர்களையும் குறுக்கே நெடுக்கே போய்க் கொண்டிருந்தவர்களையும் தமக்கு உதவி செய்ய முடியுமா என்று கிழவர் கேட்டுக்கொண்டிருந்தார். இதையெல்லாம் குறித்து அவருடைய காதில் விழாதபடி பரிகாசமாகப் பேசிச் சுற்றுப் பக்கத்திலிருந்த வீரர்கள் சிலர் குதூகலப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

இத்தகைய நிலைமையில் கிழவர் சேகரித்து வைத்திருந்த பொருள்களுக்கே ஆபத்து வந்து சேர்ந்தது. அதுவும் பல்லவ சக்கரவர்த்தியின் மூலமாக வந்தது. இரவு நேரங்களில் சில சமயம் மாமல்லர், தமது சேனா வீரர்கள் தங்கியிருக்கும் இடங்களுக்குச் சென்று பார்வையிட்டு, சம

யோசிதமான பாராட்டு மொழிகள் கூறி உற்சாகப் படுத்திவிட்டுப் போவது வழக்கம். ஊருக்குப் புறப்பட வேண்டிய நேரம் நெருங்கி விட்டபடியால் சென்ற நாலு தினங்களாகச் சக்கரவர்த்தி தினந்தோறும் இரவு வெகுநேரம் வரையில் வீரர்கள் தங்கியிருந்த இடங்களுக்குச் சென்று அவர்களைப் பார்த்தும் பேசியும் அவர்கள் சேர்த்து வைத்திருந்த பொருள்களைப் பற்றிப் பரிகாச வார்த்தைகள் ஆடியும் சந்தோஷப் படுத்தி வந்தார். தமக்காக இந்தத் தூர தேசத்துக்கு வந்து உயிரைப் பணயம் வைத்துப் போராடி, பல்லவ சாம்ராஜ்யத்துக்கு மகத்தான வெற்றியைச் சம்பாதித்துக் கொடுத்து, பல்லவ குலத்தின் பழியையும் துடைத்த வீரர்களிடம் மாமல்லருக்கு இயற்கையாகவே நன்றியும் அபிமானமும் ஏற்பட்டிருந்தன.

அத்தகைய பெரும் வெற்றிக்குப் பிறகு அவர்களை நேரில் பார்த்து க்ஷேமம் விசாரிப்பதினால் அந்த வீரர்கள் மகிழ்ச்சியடைவதுடன் பிற்காலத்தில் என்றென்றைக்கும் தமக்காக உயிரைக் கொடுக்கச் சித்தமாயிருப்பார்கள் என்பதை மாமல்லர் உணர்ந்திருந்தார். வருங்காலத்தில் அவர்களிடம் அத்தகைய உயிர்த் தியாகத்தை எதிர்பார்க்கும்படியான சந்தர்ப்பம் நேரிடாதென்று யார் சொல்ல முடியும்?

இவ்விதம் அந்த வெற்றி வீரர்களைத் தம்முடன் நிரந்தரமாய்ப் பந்தப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தோடு கூட, போர்க்களத்திலும் கோட்டைத் தாக்குதலிலும் அரும் பெரும் வீரச் செயல்கள் புரிந்தவர்களை நேரில் தெரிந்து கொண்டு அவர்களுக்கு விசேஷ சன்மானம் அளிக்க வேண்டுமென்னும் விருப்பமும் மாமல்லரின் மனதில் இருந்தது.

மேற் சொன்ன நோக்கங்களுடன், மானவன்மன், ஆதித்த வர்மன், சத்ருக்னன் ஆகியவர்கள் பின்தொடர, படை வீரர்களைப் பார்த்துக் கொண்டு வந்த நரசிம்ம சக்கரவர்த்தி நமது சோழ வம்சத்து வீரக் கிழவரின் அருகில் வந்ததும் சிறிது நின்று அவரை உற்றுப் பார்த்தார். "ஆ! இந்தப் பெரியவரை நாம் மறந்தே போய்விட்டோமே?" என்று மெள்ளச் சொல்லிவிட்டு, வெளிப்படையாக, "இது என்ன, ஐயா! இவ்வளவு பொருள்களை நீர் எப்படிச் சேர்த்து வைத்துக் கொள்ளத் துணிந்தீர்? ஒவ்வொருவரும் தம்மால் தூக்கிக்கொண்டு போகக்கூடிய அளவுதானே வைத்துக் கொள்ளலாம் என்பது நமது கட்டளை?" என்று கேட்டார்.

"சக்கரவர்த்தி! நூறு வீரர்களோடு வந்தேன். என்னைத் தவிர அவ்வளவு பேரும் வாதாபிப் போரில் உயிர் துறந்தார்கள் ..."

"ஆகா! சோழ நாட்டு வீரந்தான் வீரம்! ... ஆனால் இதைக் கேட்பதற்கு நமது சேனாபதி இங்கில்லையே?" என்று சக்கரவர்த்தி கண் சிமிட்டலுடன் அருகிலிருந்தவர்களிடம் சொல்லிவிட்டு, "இருக்கட்டும், ஐயா! நூறு வீரர்களும் போரில் இறந்திருந்தால் வீர சொர்க்கத்துக்குப் போய்ச் சேர்ந்திருப்பார்கள். அவர்களுக்கு இந்தப் பொருள்களினால் பயனில்லையே?" என்றார்.

"பல்லவேந்திரா! எனது ஏக புதல்விக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும். புராதன சோழ வம்சத்தின் பெருமைக்குகந்த முறையில் ஸ்ரீதனம் கொடுக்க வேண்டுமென்று விரும்பி ..." என்று கிழவர் தயங்கினார்.

மாமல்லர் புன்னகையுடன் மானவன்மரைப் பார்த்து, "இவருக்கு விஷயமே தெரியாது போலிருக்கிறது. சொல்லட்டுமா?" என்று கேட்க, "வேண்டாம், பிரபு! இப்போது திடீரென்று சொன்னால் சந்தோஷ மிகுதியால் கிழவரின் பிராணன் போய்விடும்!" என்றார் மானவன்மர்.

மாமல்லர் செம்பியனைப் பார்த்து, "நல்லது ஐயா! உமது பெண்ணின் ஸ்ரீதனத்தைப் பற்றி உமக்கு என்ன கவலை? மகேந்திர பல்லவரின் மனைவி— புவனமகாதேவி,— உமது குமாரியைத் தமது புதல்வியாகக் கொண்டிருப்பது உமக்குத் தெரியாதா?" என்றார்.

"தெரியும் பிரபு! இருந்தாலும் ஸ்ரீதனம் கொடுக்கவேண்டியகடமை பெற்ற தகப்பனுடையதல்லவா? ...... கருணை கூர்ந்து இந்தப் பொருளையெல்லாம் கொண்டு போய்ச் சேர்ப்பதற்கு ......"

கிழவர் சொல்லி முடிப்பதற்குள் மாமல்லர் குறுக்கிட்டு, "மானவன்மரே! இந்தப் பெரியவருடைய பெண்ணின் ஸ்ரீதனத்துக்காக நூறு யானையும், நூறு யானை சுமக்கக்கூடிய பொருளும் கொடுங்கள்!" என்று சொல்லி விட்டு மேலே சென்றார்.

செம்பியன் வளவன் தமது செவிகளையே நம்ப முடியாமல் பிரமித்துப் போனார்.

இதையெல்லாம் பார்த்துக் கேட்டுக் கொண்டு அக்கம் பக்கத்தில் நின்ற வீரர்கள், "வள்ளல் மாமல்லர் வாழ்க! வாழ்க!" என்று கோஷித்தார்கள்.

சக்கரவர்த்தியும் அவருடைய கோஷ்டியும் அப்பால் சென்று வெகு நேரம் வரையில் அந்த வீரர்களில் பலர் மாமல்லரின் வீர பராக்கிரமங்களைப் பற்றியும் அரும் பெரும் குணாதிசயங்களைப் பற்றியுமே பேசிக் கொண்டிருந்தார்கள். எனினும், இடையிடையே உற்சாகக் குறைவை உண்டு பண்ணிய பேச்சு ஒன்றும் எழுந்தது. அது என்னவெனில், முன்னெல்லாம்போல் சக்கரவர்த்தியுடன் ஏன் சேனாபதி பரஞ்சோதி தொடர்ந்து வரவில்லை என்பதுதான்.

வீர மாமல்லரும் வீரர் பரஞ்சோதியும் நகமும் சதையும் போலும் பூவும் மணமும் போலும் பிரிக்க முடியாத நண்பர்கள் என்பதாக இத்தனை காலும் அவர்களை அறிந்தவர்கள் எல்லாரும் நினைத்துக் கொண்டிருந்தார்கள். இது விஷயம் தமிழகத்து வீரர்களுக்கெல்லாம் மகிழ்ச்சியையும் பெருமையையும் அளித்து வந்தது. இராஜகுலம் எதிலும் பிறவாமலும், இராஜ வம்சத்தோடு உறவு பூணாதவருமான ஒருவர் தமது வீரம், ஒழுக்கம், ஆற்றல் இவை காரணமாகவே சேனாபதி பதவியை யடைந்திருந்ததும் அவருக்கும் சக்கரவர்த்திக்கும் அத்தகைய நெருங்கிய நட்பு ஏற்பட்டிருந்ததும் மற்ற வீரர்களுக்கெல்லாம் மிக்க பெருமையை அளித்து வந்தது.

ஆனால் அப்பேர்ப்பட்ட சிநேகத்துக்கு,—என்றும் அழியாத சிரஞ்சீவி சிநேகம் என்று எல்லாரும் நினைத்திருந்த சேர்க்கைக்கு,—இப்போது ஊறு நேர்ந்து விட்டதாகத் தோன்றியது. மாமல்லருக்கும் பரஞ்சோதிக்கும் மனவேற்றுமை ஏற்பட்டு விட்டதாகக் காணப்பட்டது. வாதாபி கோட்டையைத் தாக்கலாமா வேண்டாமா என்ற விவாதத்திலிருந்து அந்த வேற்றுமை உண்டானதாகச் சிலர் சொன்னார்கள். சிவகாமிதேவி விஷயத்தில் மாமல்லர் மிகக் கடுமையாக நடந்து கொண்டது சேனாபதிக்கு ஆறாத மனப் புண்ணை உண்டாக்கிவிட்டதாகச் சிலர் ஊகித்தார்கள். இலங்கை இளவரசரும், ஆதித்த வர்மரும் சேர்ந்து போதனை செய்து மாமல்லருடைய மனதில் களங்கம் உண்டு பண்ணி விட்டதாகச் சிலர் கூறினார்கள். "அதெல்லாம் ஒன்றுமில்லை; எல்லாரும் வீண் வம்பு வளர்க்கிறீர்கள்; சேனாபதிக்கு இடைவிடாத உழைப்பினால் தேக சுகம் கெட்டு விட்டது. அதனால்தான் சக்கரவர்த்தி அவரை வெளியே வராமல் கூடாரத்துக்குள்ளேயே இருந்து இளைப்பாறும்படி கட்டளையிட்டிருக்கிறார்" என்று நல்ல இருதயம் உடையவர்கள் சிலர் நல்ல காரணத்தைக் கற்பித்தார்கள்.

"நாளைக் காலையில் கொடியேற்றத்துக்குச் சேனாபதி வருகிறாரா, இல்லையா என்று பார்க்கலாம். கொடியேற்றத்துக்கு அவர் வந்தால் எல்லாச் சந்தேகமும் தீர்ந்து விடும்!" என்று சிலர் மத்தியஸ்தமாய்ப் பேசினார்கள்.

## அத்தியாயம் 51

# சிறுத் தொண்டர்

**ப**ல்லவ வீரர்களில் நல்லவர்கள் சிலர் சந்தேகித்ததுபோல் சேனாபதி பரஞ்சோதியின் உடம்புக்கு ஒன்றுமில்லை. அவருடைய தேகம் சௌக்கியமாகத்தா னிருந்தது. ஆனால் அவருடைய மனத்திலேதான் சௌக்கியமும் இல்லை; சாந்தமும் இல்லை.

தம்முடைய கூடாரத்தில் தன்னந்தனியாகப் பரஞ்சோதி உட்கார்ந்திருந்தார். அவருக்குத் தூக்கம் வரவில்லை.

அவருடைய மனக் கண் முன்னால் வாதாபியின் வீடுகள் பற்றி எரியும் காட்சியும், ஸ்திரீகளும், குழந்தைகளும் வயோதிகர்களும் அலறிக் கொண்டு ஓடும் காட்சியும், பல்லவ வீரர்கள் வாதாபியின் எரிகிற வீடுகளிலும் கடைகளிலும் புகுந்து கொள்ளையடிக்கும் காட்சியும், தலை வேறு கை வேறு கால் வேறாகக் கிடந்த உயிரற்ற வீரர்களின் காட்சியும் இரத்த வெள்ளம் ஓடும் காட்சியும் மாறி மாறி வந்து கொண்டிருந்தன.

இந்தக் கோரமான காட்சிகளோடு, இருளடைந்த பாதாள புத்த விஹாரத்தில் சிவகாமி ஸ்மரணையற்றுக் கீழே துவண்டு கிடந்த காட்சியும், அவள் மீது விஷக் கத்தியை எறியப்போன நாக நந்தியின் தோற்றமும், விஷக் கத்தியைக் காட்டிலும் குரூரமான நஞ்சு தோய்ந்த சொல்லம்புகளை அந்தப் பேதைப் பெண்மீது மாமல்லர் பொழிந்த சம்பவமும், கத்தியால் குத்தப்பட்டுத் தரையிலே செத்துக் கிடந்த கண்ணபிரானுடைய, களை யிழந்த முகமும் இடை யிடையே தோன்றின.

இவ்வளவுக்கும் மேலாக, நெற்றியில் வெண்ணீறும் தேகமெல்லாம் ருத்ராட்ச மாலையும் அணிந்து கையில் உழவாரப்படை தரித்துச் சாந்தமும் கருணையும் பொலிந்த திருமுகத்தோடு விளங்கிய திருநாவுக்கரசர் பெருமான் சேனாபதி பரஞ்சோதியை அன்புடன் நோக்கி, "அப்பனே! நீ எங்கே இருக்கிறாய்? என்ன காரியம் செய்கிறாய்? போதும்! வா! உனக்காக எத்தனை நாள் காத்துக் கொண்டிருப்பேன்?" என்று கேட்டுக் கொண்டே யிருந்தார். அதற்குப் பரஞ்சோதி, "குருதேவா! இன்னும் ஒரு நாள்—அறுபது நாழிகை நேரந்தான்! பிறகு வந்து விடுகிறேன்" என்று மறுமொழி சொல்லிக் கொண்டிருந்தார்.

* * *

சிவகாமி தேவியை விடுதலை செய்து ஆயனரிடம் சேர்ப்பித்து அவர்களை முன்னதாக ஊருக்கும் அனுப்பி வைத்த பிறகு, பரஞ்சோதி பொறுக்கி எடுத்த வீரர்கள் அடங்கிய படையுடன் மேற்கு நோக்கிச் சென்று, வேங்கியிலிருந்து வரும் சளுக்கர் சைன்யத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஆதித்த வர்மருடன் சேர்ந்து கொண்டார். வாதாபி தகனம் ஆரம்பமான மூன்று நாளைக்கெல்லாம் வேங்கி சைன்யம் வந்து சேர்ந்தது. அந்தச் சைன்யம் பெரும்பாலும் யானைப் படையும் குதிரைப் படையும் அடங்கியது. மேற்படி சைன்யத்தின் தலைவர்கள் புலிகேசியின் மரணத்தையும் வாதாபி கோட்டையின் வீழ்ச்சியையும் அறிந்து கொண்டதும் பின்னுக்குத் திரும்பிச் செல்லப் பார்த்தார்கள். பரஞ்சோதியின் முன் யோசனை அதற்கு இடங் கொடுக்கவில்லை. ஆதித்த வர்மரை நின்ற இடத்திலேயே நிற்க விட்டுப் பரஞ்சோதி விரைந்து வளைவாகச் சென்று வேங்கி சைன்யத்தைப் பின்னுக்குச் செல்ல முடியாமல் தடுத்தார். இவ்விதம் இரு புறத்திலும் சூழப்பட்ட வேங்கி சைன்யம் வேறு வழியின்றிச் சரணாகதி அடைந்தது. அந்தச் சைன்யத்தைச் சேர்ந்த பதினாயிரம் யானைகளும் முப்பதினாயிரம் குதிரைகளும் ஒரு சேதமும் இல்லாமல் கிடைத்து விட்டன.

இந்த மாபெருங் காணிக்கையை மாமல்லரிடம் ஒப்புவித்ததும் பரஞ்சோதியார் தம்மைச் சேனாபதி பதவியிலிருந்து விடுதலை செய்யும்படி கேட்டுக் கொண்டார். இத்தனை காலம் இராஜ்ய சேவை செய்தாகி விட்டதென்றும், இனிமேல் சிவபெருமானுக்கு அடிமை பூண்டு சிவனடியார்களுக்குத் தொண்டு செய்து வாழ்க்கை நடத்த விரும்புவதாகவும் தெரிவித்துக் கொண்டார்.

மேற்படி வேண்டுகோள் மாமல்லருக்கு அதிகமான ஆச்சரியத்தை அளிக்கவில்லை. ஏற்கெனவே மகேந்திர பல்லவர் பரஞ்சோதியைப் பற்றி, "இந்த வாலிபன் மகா வீரனாகி அரும் பெரும் செயல்கள் புரிவான். ஆனால் வெகு காலம் போர்த் தொழிலில் இருக்க மாட்டான். அவன் முகத்தில் வீரக் களை ஒளிர்வதுபோல் சிறந்த சிவபக்தியின் சின்னமும் ஜொலிக்கிறது. விரைவிலே சிவபெருமானுக்கு ஆட்பட்டு அடியார்க்கு அடியனாகும் பெரும் பதத்தை எய்துவான்!" என்று சொல்லியிருந்ததை மாமல்லர் ஒருபோதும் மறக்கவில்லை. சென்ற சில காலமாகவே பரஞ்சோதியின் மனப்போக்கு மாறி, வைராக்கியம் அடைந்து வருவதை அவர் கவனித்து

வந்தார். எனவே, அவருடைய வேண்டுகோளை மறுக்காமல், "சேனாபதி! தங்கள் இஷ்டப் படியே ஆகட்டும். ஆனால் எரிந்து பாழான வாதாபியின் மத்தியில் சிங்கக் கொடி யேற்றும் வைபவத்தை மட்டும் நடத்தி விடுங்கள். அப்புறம் விடை தருகிறேன்" என்று சொல்லி யிருந்தார்.

மேற்படி கொடியேற்று விழா மறுநாள் சூரியோதயத்தில் நடை பெறுவதா யிருந்தபடியால்தான் பரஞ்சோதி "இன்



னும் ஒரு நாள்" என்று ஜபம் செய்து கொண்டிருந்தார்.

* * *

மறு நாள் காலையில் உதித்த சூரிய பகவான் சில நாளைக்கு முன்பு வாதாபி நகரம் இருந்த இடத்தில், — நேற்றெல்லாம் சாம்பரும் கரியும் குப்பல் குப்பலாகக் கிடந்த இடத்தில், — கண்ணைக் கவரும் அதிசயமான காட்சி ஒன்றைக் கண்டார்.

நெடுந் தூரத்துக்கு நெடுந்தூரம் பல்லவ—பாண்டிய சேனா வீரர்கள் வாளும் வேலும் ஏந்தி அணிவகுத்து நின்றார்கள். அவர்களுக்குப் பின்னால் அழகாக அலங்கரிக்கப்பட்ட போர் யானைகளும் புரவிகளும் நிரை நிரையாகக் கண்ணுக்கெட்டிய தூரம் நின்றன. இந்தச் சேனா சமுத்திரத்துக்கு மத்தியில், அலைகடலுக்கு நடுவே தோன்றும் கப்பலின் கூம்பைப்போல் ஒரு புத்தம் புதிய ஜய ஸ்தம்பம்—சிற்ப வேலைப்பாடமைந்த அழகிய ஸ்தம்பம், — கம்பீரமாக நின்றது.

லட்சக் கணக்கான வீரர்கள் அவ்விடத்தில் கூடியிருந்த போதிலும், சிறந்த கட்டுப்பாடு பெற்றவர்களாதலால், கப்சிப் என்று நிச்சப்தம் குடிகொண்டிருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் கூட்டத்தின் ஒரு மூலையில்



கலகலப்பு உண்டாயிற்று. பேரிகைகள் அதிர்ந்தன; எக்காளங்கள் முழங்கின. சக்கரவர்த்தியின் வருகைக்கு அறிகுறியான மேற்படி வாத்திய கோஷத்தைக் கேட்டதும், அந்த லட்சக் கணக்கான வீரர்களின் கண்டங்களிலிருந்து ஏககாலத்தில் "வாதாபி கொண்ட மாமல்ல சக்கரவர்த்தி வாழ்க!" என்ற கோஷம் கிளம்பி மேலே வான மண்டலம் சென்று, நாலா திசையிலும் பரவிப் படர்ந்து, எங்கெங்கும் எதிரொலியை உண்டாக்கியது.

சேனாபதி பரஞ்சோதி, இலங்கை இளவரசர் மானவன்மர், வேங்கி அரசர் ஆதித்த வர்மர் முதலியவர்கள் பின் தொடர மாமல்லர் ஜயஸ்தம்பத்தின் அடியில் வந்து நின்றதும் மறுபடியும் ஒரு தடவை மேற்கண்ட ஜய கோஷம் கிளம்பி எட்டுத் திக்குகளையும் கிடுகிடுக்கச் செய்தது.

சப்தம் அடங்கியதும் மாமல்லர் சுற்றிலும் நின்றவர்களைப் பார்த்துச் சில விஷயங்களைக் கூறினார். தாமும் பரஞ்சோதியும் ஒன்பது வருஷத்துக்கு முன்னால் மாறுவேடம் பூண்டு அவர்கள் இப்போது நிற்கும் அதே இடத்துக்கு வந்திருந்ததையும், அச்சமயம் அங்கு வேறொரு ஜய ஸ்தம்பம் நின்றதையும், அதில் புலிகேசி மகேந்திர பல்லவரை முறியடித்தது பற்றிய பொய்யான விவரம் எழுதியிருந்ததையும், அந்த ஜய ஸ்தம்பத்தைப் பெயர்த்தெறிந்து அதன் இடத்தில் பல்லவ ஜய ஸ்தம்பத்தை நிலைநாட்டுவதென்று தாமும் சேனாபதியும் சபதம் செய்ததையும், அந்தச் சபதம் இன்று நிறைவேறுவதையும் குறிப்பிட்டு, இந்த மாபெரும் வெற்றிக்கெல்லாம் முக்கிய காரண புருஷரான சேனாபதி பரஞ்சோதிதான் அந்த ஜய ஸ்தம்பத்தில் வெற்றிக் கொடியை ஏற்றுவதற்கு உரிமையுடையவர் என்று கூறி முடித்தார்.

சக்கரவர்த்திக்கும் சேனாபதிக்கும் ஏதாவது மன வேற்றுமை ஏற்பட்டிருக்கிறதோ என்பது பற்றிப் பல்லவ வீரர்களிடையில் சந்தேகம் ஏற்பட்டிருந்ததைப் பார்த்தோமல்லவா?

எனவே, இப்போது ஜய ஸ்தம்பத்தின் அருகில் சக்கரவர்த்தியும் சேனாபதியும் சேர்ந்து நிற்பதைப் பார்த்ததுமே அவ் வீரர்களுக்கு மிகுந்த உற்சாகம் ஏற்பட்டது. சக்கரவர்த்தி சேனாபதியைப் பற்றிக் கூறியதை அருகிலே நின்று நன்றாய்க் கேட்பவர்களும் தூரத்திலே நின்று அரைகுறையாகக் கேட்பவர்களுங்கூட அளவற்ற மகிழ்ச்சியடைந்தார்கள்.

சேனாபதி புதிய ஜய ஸ்தம்பத்தின் மீது பல்லவ சிம்மக் கொடியை உயர்த்திய போது, சேனா வீரர்களின் குதூகலம் வரம்பு கடந்து பொங்கி ஜயகோஷமாகவும் வாழ்த்துரைகளாகவும் வெளியாயிற்று. பேரிகை முழக்கங்களும், வாத்திய கோஷங்களும், லட்சக் கணக்கான கண்டங்களிலிருந்து கிளம்பிய ஜயத்வனிகளும், அவற்றின் பிரதித்வனிகளுமாகச் சேர்ந்து சிறிது நேரம் காது செவிடுபடச் செய்தன.

சப்தம் அடங்கும் வரையில் பொறுத்திருந்த மாமல்லர் கடைசியாக அன்று அவர்களிடம் விடை பெறுவதற்கு முன் வருத்தமான விஷயத்தைத் தாம் தெரிவிக்க வேண்டியிருக்கிறது என்ற பூர்வ பீடிகையுடன் ஆரம்பித்து, இத்தனை காலம் தம்முடன் இருந்து இரவு பகல் சேவை புரிந்து இந்த மகத்தான வெற்றியைப் பெற்றுக் கொடுத்த பரஞ்சோதியார் இப்போது தம்மிடம் விடுதலை கேட்கிறார் என்றும், அவருடைய உள்ளம் சிவ பக்தியில் ஈடுபட்டிருக்கிறதென்றும், சிவனடியாரைச் சேனைத் தலைவராக வைத்திருப்பது பெருங் குற்றமாகுமென்றும், ஆகையால் அவருக்கு விடுதலை கொடுத்து விடத் தாம் சம்மதித்து விட்டதாயும், நாளைக் காலையில் அவர் தம்மையும் பல்லவ சைன்யத்தையும் பிரிந்து தனி வழியே தீர்த்த யாத்திரை போகிறார் என்றும், வீரர்கள் எல்லாரும் உற்சாகமாக அவருக்கு விடை கொடுத்து அனுப்ப வேண்டும் என்றும் தெரிவித்தார். தாம் தெரிவித்த விஷயம் அவ்வளவாக அந்த வீரர் கூட்டத்தில் உற்சாகம் உண்டு பண்ணவில்லையென்பதையும் கண்டார். எல்லையற்ற மௌனம் அந்தப் பெருங் கூட்டத்தில் அப்போது குடிகொண்டிருந்தது. ஆனால் அடுத்த நிமிஷம், ஆஜானுபாகுவாய் நெடிதுயர்ந்திருந்த மாமல்ல

சக்கரவர்த்தி தம்மைவிடக் குட்டையான சேனபதி பரஞ்சோதியை மார்புறத் தழுவிக் கொண்டபோது, மீண்டும் அந்தச் சேனு சமுத்திரத்தில் குதுகல கோலாகலத் தொனிகள் எழுந்தன.

* * *

அன்றைக் கெல்லாம் மாமல்லர் பல்லவ — பாண்டிய வீரர்களுக்கும் படைத் தலைவர்களுக்கும் பரிசுகள் வழங்குவதில் ஈடுபட்டிருந்தார். வாதாபி எரியத் தொடங்கிய நாளிலிருந்து பல்லவ சைன்யத்துடன் வந்திருந்த நூறு பொற் கொல்லர்கள் ஆயிரம் வீரர்களின் உதவியுடன் தங்கத்தை உருக்கிப் புதிய சிங்க முத்திரை போட்ட பொன் காசுகள் தயாரிப்பதில் ஈடுபட்டிருந்தார்கள். வாதாபி அரண்மனைகளிலிருந்தும் சளுக்க சாம்ராஜ்ய பொக்கிஷங்களிலிருந்தும் கைப்பற்றிய ஏராளமான தங்கக் கட்டிகளையும் பொன் னாபரணங்களையும் பெரிய பெரிய கொப்பறைகளில் போட்டுப் பிரம்மாண்டமான அடுப்புக்களில் தீ மூட்டி உருக்கி நாணய வார்ப்படத்துக்காக அமைக்கப்பட்ட அச்சுக்களிலே ஊற்றி எடுத்து, லட்ச லட்சமான கழஞ்சு நாணயங்களைச் செய்து குவித்துக்கொண்டிருந்தார்கள்.

ஒவ்வொரு பல்லவ—பாண்டிய வீரனுக்கும் அவனவன் தானே சேகரித்துக் கொண்ட செல்வத்தைத் தவிரத் தலைக்குப் பத்து பொற் கழஞ்சுகள் வீதம் அளிக்கப்பட்டன.

போர் வீரர்களுக்கு மேற் கண்டவாறு பரிசு அளித்த பிறகு படைத் தலைவர்களுக்கும் சிறந்த வீரச் செயல்கள் புரிந்தவர்களுக்கும் விசேஷ பரிசுகள் அளிக்கப்பட்டன. யானைகளும் குதிரைகளும் அந்தந்த மிருகங்கள் சுமக்கக்கூடிய அளவு செல்வங்களும் பகிர்ந்து கொடுக்கப்பட்டன.

துங்கபத்திரை — கிருஷ்ணு நதிக்கு அப்பால் பல்லவ ஆதிக்கத்துக் குட்பட்ட விஸ்தாரமான பிரதேசங்களை எல்லாம் வேங்கியைத் தலைநகராக்கிக் கொண்டு சர்வாதிகாரத்துடன் ஆளும்படி ஆதித்த வர்மர் நியமிக்கப்பட்டார்.

இலங்கை இளவரசன் மானவன்மருக்குத் தக்க வெகுமதி யளிப்பது பற்றி மாமல்லர் யோசித்தபோது, "பிரபு! என் தந்தை வீற்றிருந்து அரசாண்ட இலங்கை சிம்மாசனந்தான் நான் வேண்டும் பரிசு; வேறு எதுவும் வேண்டாம்!'' என்றார் மானவன்மர்.



திருச்செங்காட்டங்குடி கிராமத்து வாதாபி விநாயகர் கோயில்

கடைசியில், மாமல்லர் பரஞ்சோதியைப் பார்த்துச் சொன்னார்:— "நண்பரே! இந்த மகத்தான வெற்றி முழுதும் தங்களுடையது. எனவே, இந்த வெற்றியின் மூலம் கிடைத்த அளவில்லாத செல்வங்களும் உங்களுடையவைதான். முப்பதினயிரம் யானைகள், அறுபதினயிரம் குதிரைகள், காஞ்சி அரண்மனைகள் எல்லாம் கொள்ளாத அளவு நவரத்தினங்கள், அளவிட முடியாத தங்கம் வெள்ளி ஆபரணங்கள் இவை யெல்லாம் நமக்கு இந்தப் போரிலே லாபமாகக் கிடைத்திருக்கின்றன. இவற்றில் ஒரு பகுதியையாவது தாங்கள் எடுத்துக் கொள்ளத்தான் வேண்டும். ஐயாயிரம் யானைகளும், பதினயிரம் குதிரைகளும், அவை சுமக்கக் கூடிய செல்வங்களும் தங்களுக்கு அளிக்கிறேன்......''

மாமல்லரை மேலே பேசவிடாமல் தடுத்துப் பரஞ்சோதி கூறினர்:—

"பல்லவேந்திரா! ரொம்பவும் மன்னிக்க வேண்டும். தங்களிடம் நான் கோரும் முக்கியமான பரிசு தங்களுடைய தங்கமான இருதயத்தில் என்றைக்கும் ஒரு சிறு இடந்தான். அதற்கு மேலே நான் கோரும் பரிசு ஒன்றே ஒன்று இருக்கிறது. மற்ற பல்லவ வீரர்களைப் போல் அந்தப் பொருளை வாதாபிக் கோட்டையிலிருந்து நானே கொண்டு வந்து சேர்த்தேன்!"

"ஆகா! அது என்ன?" என்று மாமல்லர் வியப்புடன் கேட்டார்.

"அது இதோ வரும் மூடு பல்லக்கிலே இருக்கிறது!" என்று பரஞ்சோதி கூறியபோது, நாலு வீரர்கள் ஒரு மூடு பல்லக்கைக் கொண்டு வந்து இறக்கினார்கள். பல்லக்கைத் திறந்து பார்த்தபோது அதற்குள்ளே நாம் ஏற்கெனவே பார்த்த விநாயகர் விக்கிரஹமும் இருந்தது.

வாதாபிக் கோட்டை வாசலில் இருந்த அந்த விநாயகர் விக்கிரகத்துக்குத் தாம் பிரார்த்தனை செய்து கொண்டதைப் பற்றிப் பரஞ்சோதி கூறி, அதைத் தம்முடன் கொண்டு போய்த் தாம் பிறந்து வளர்ந்த செங்காட்டாங்குடி கிராமத்தில் பிரதிஷ்டை செய்ய விரும்புவதாகவும் தெரிவித்தார்.

மேற்படி விக்கிரகத்தைத் தவிர வாதாபி நகரத்திலிருந்து கவரப்பட்ட வேறெந்தப் பொருளும் தமக்கு வேண்டியதில்லையென்று பரஞ்சோதி கண்டிப்பாய் மறுத்து விட்டார்.

வேறு வழியின்றி மாமல்லர் பரஞ்சோதியின் விருப்பத்துக்கு இணங்க வேண்டியதாயிற்று. பரஞ்சோதி ஸ்தல யாத்திரை செல்லும்போது இரண்டு யானை, பன்னிரண்டு குதிரை, நூறு காவலாள் வீரர்கள் ஆகிய பரிவாரங்களை மட்டும் உடன் அழைத்துச் செல்ல வேண்டுமென்று மாமல்லர் பிடிவாதம் பிடித்துத் தமது நண்பரை இணங்கச் செய்தார்.

மறுநாள் மத்தியானம் மாமல்லரும் பல்லவ சைன்யமும் அவர்கள் வந்த வழியே காஞ்சிக்குத் திரும்பிச் செல்லப் புறப்படுவதாக இருந்தது. பரஞ்சோதியோ துங்கபத்திரை நதிக்கரையோடு சென்று ஸ்ரீசைலம் முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்து விட்டு வருவதற்காக அன்று காலையிலேயே தமது சிறு பரிவாரத்துடன் கிளம்பினார்.

கிளம்புவதற்கு முன்னால் மாமல்லரிடம் கடைசியாக விடைபெற்றுக் கொள்வதற்காகச் சக்கரவர்த்தியின் கூடாரத்துக்குப் பரஞ்சோதி வந்தபோது, பல்லவ — பாண்டிய வீரர்கள் தங்களுடைய கட்டுப்பாட்டையெல்லாம் மறந்து அங்கே கூட்டம் கூடி விட்டார்கள். பரஞ்சோதியின் புதிய தோற்றம் அவர்களைச் சிறிது நேரம் திகைப்படையச் செய்தது. கத்தி, கேடயம், வாள், வேல், தலைப்பாகை, கவசம், அங்கி இவற்றையெல்லாம் களைந்தெறிந்து விட்டுப் பரஞ்சோதி நெற்றியில் வெண்ணீறு தரித்து, தலையிலும் கழுத்திலும் ருத்ராட்சம் அணிந்து பழுத்த சிவ பக்தரின் தோற்றத்தில் விளங்கினார். அவருடைய திருமுகம் நேற்றுவரை இல்லாத பொலிவுடன் சுடர் விட்டுப் பிரகாசித்ததாக அவ்வீரர்களுக்குத் தோன்றியது. சற்று நேரம் திகைத்து நின்றவர்கள், அவர்களைப் பார்த்துப் பரஞ்சோதி கையெடுத்துக் கும்பிட்டதும், "சேனாபதி பரஞ்சோதி வாழ்க! வாழ்க!!" என்று கூவினார்கள். பரஞ்சோதி அவர்களைக் கை கூப்பி வணங்கி அமைதி உண்டு பண்ணி, "நண்பர்களே! இன்று முதல் நான் சேனாபதி இல்லை; தளபதியும் இல்லை. சிவனடியார்களுக்குத் திருத்தொண்டு செய்யும் தொண்டர் கூட்டத்தில் அடியேன் ஒரு சிறு தொண்டன்!" என்று கூறினார்.

அளவிலாத வியப்புடனும் பக்தியுடனும் அதைக் கேட்டுக் கொண்டு நின்ற வீரர்களில் ஒருவன் அப்போது ஒரு சிரஞ்சீவி கோஷத்தைக் கிளப்பினான்.

"சிவனடியார் சிறுத் தொண்டர் வாழ்க!" என்று அவன் கம்பீரமாகக் கோஷித்ததை உடனே நூறு நூறு குரல்கள் திருப்பிக் கூவின.

"சிறுத் தொண்டர் வாழ்க!" "சிறுத் தொண்டர் வாழ்க!" என்ற கோஷம் நாலாபுறத்திலும் பரவி ஆயிர மாயிரம் குரல்களில் ஒலித்து எதிரொலித்தது. பரஞ்சோதியார் தமது சிறிய பரிவாரத்துடனும் வாதாபி விநாயகருடனும் நெடுந்தூரம் சென்று கண்ணுக்கு மறையும் வரையில் "சிறுத் தொண்டர் வாழ்க!" என்ற கோஷம் அந்தச் சேனா சமுத்திரத்தில் திரும்பத் திரும்ப எழுந்து கொண்டேயிருந்தது!

AC-2A TM

# மிஸ்டர் ஜி. டி. பிர்லா அனுப்பிய செய்தி:—

பிர்லா பிரதர்ஸ், லிமிடெட் என்னும் ஸ்தாபனத்தின் மானேஜிங் டைரெக்டரும், யுனைடெட் கமெர்ஷியல் பாங்க் லிமிடெட் என்னும் ஸ்தாபனத்தின் அக்ராஸனரும் ஆகிய மிஸ்டர் ஜி. டி. பிர்லா.

"இன்னுங் கொஞ்ச காலத்தில் தேசிய ஸர்க்கார் ஒன்று அதிகாரத்துக்கு வருமென்று நான் எதிர்பார்க்கிறேன். அப்படி அது வரும்போது, பணம் சேர்த்து வைத்து அதை ஸர்க்காருக்குக் கடன் கொடுப்பதானது தேசிய திட்டத்தில் ஒரு முக்கியமான அம்சமாக இருக்கப்போகிறது. இவ்விதமாக தேசத்துக்குச் சேமநிதி ஒன்று உண்டாகிறது. இதனால், பணத்தை வட்டிக்குப் போட்டுவைப்பவருக்கு அப் பணம் பத்திரமாயிருந்து லாபத்தோடு திரும்பி வருவதுமல்லாமல் பொது ஜனங்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்காகப் பெரிய திட்டங்கள் போட தேசிய ஸர்க்காருக்குப் பணமும் கிடைக்கிறது. ஆகையால், பெரிய அளவிலோ சிறிய அளவிலோ பொருள்களைக்கிரயத்துக்கு வாங்கக்கூடிய சக்தியை உபரியாக உடையவர்கள் பணத்தைச் சேர்த்து அதை வட்டிக்குப் போட்டு வைக்கத் தாங்களாகவே எல்லாவிதமான முயற்சியும் செய்யவேண்டும்."

### பார்த்ததும் தெரிந்து கொள்ளக்கூடிய விஷயங்கள்

1. 12 நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகளை 5, 10, 50, 100, 500, 1,000 அல்லது 5,000 ரூபாய்களுக்கு வாங்கலாம்.

2. எந்த ஒருவரும் 5,000 ரூபாய்க்குமேல் வாங்க முடியாது. இவை மிகச் சிறந்தவைகளானபடியால், எல்லாருக்கும் கிடைக்கும்பொருட்டு ஒருவருக்கு இவைகளை இன்ன மதிப்பு வரையில்தான் கொடுக்கவேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், இரண்டுபேர் கூட்டாக 10,000 ரூபாய்க்கு வாங்கலாம்.

3. இவைகளின் மதிப்பு 12 வருஷங்களில் 50 சதவீதம் உயருகிறது. வட்டிக்குப் போட்டுவைக்கப்பட்ட ஒவ்வொரு ரூபாயும் ஒன்றரை ரூபாய் ஆகிவிடுகிறது.

4. உரிய காலத்தில் இவைகளிலிருந்து கிடைக்கும் லாபம் 4⅙ சதவீதம் தனிவட்டியாகும்.

5. ஸம்பாதிக்கப்பட்ட வட்டிக்கு இன்கம் டாக்ஸ் செலுத்த வேண்டியதில்லை.

6. இவைகளை 2 வருஷங்களுக்குப் பிறகு (5 ரூபாய் ஸெர்டிபிகேட்டுகள் விஷயத்தில் 18 மாதங்களுக்குப் பிறகு) ரொக்கமாக மாற்றிக்கொள்ளலாம்; ஆனால், நீர் இவைகளை கெடு காலம் முழுவதும் வட்டிக்கு விட்டுவைத்திருந்தால் உமக்கு நல்ல லாபம் கிடைக்கும்.

7. சிறு தொகைகளைச் சேர்த்துவைப்பவர்கள் 1 ரூபாய், 8 அணா அல்லது 4 அணாவுக்கு ஸேவிங்ஸ் ஸ்டாம்புகள் வாங்கலாம். சேர்க்கப்பட்ட ஸ்டாம்புகளின் மதிப்பு 5 ரூபாயானதும், அவைகளைக் கொடுத்துவிட்டு அவைகளுக்குப் பதிலாக ஒரு ஸெர்டிபிகேட் பெற்றுக்கொள்ளலாம்.

8. இந்த ஸெர்டிபிகேட்டுகள், ஸ்டாம்புகள் ஆகிய இரண்டையும் தபாலாபீஸுகளிலாவது கவர்மெண்டாரால் நியமிக்கப்பட்ட அதிகாரம்பெற்ற ஏஜெண்டுகளிடமாவது ஸேவிங்ஸ் பீரோக்களிலாவது பெற்றுக்கொள்ளலாம்.

உமது பணத்திலிருந்து 50 சதவீதம் லாபம் கிடைக்கும்படிச் செய்துகொள்ளவும்.

# நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகள் வாங்கவும்.

AC 1 A TM

# கதவு திறந்தது!

**விந்தன்**

டாக்டர் ரங்கராவ் அந்த ஆஸ்பத்திரியில் வேலைக்கு அமர்ந்ததிலிருந்து இதுவரை எத்தனையோ பிரேதங்களைப் பரிசோதித்திருக்கிறார். ஆனாலும் அன்றைய தினம் பரிசோதனைக்கு வந்த பிரேதத்தைப் பார்த்ததும் ஏற்பட்ட அதிர்ச்சியும் அனுதாபமும் என்றுமே அவருக்கு ஏற்பட்டதில்லை.

ஏன்?

அவருடைய உள்ளம் மரித்த ஒரு ஜீவனின் பிரேதமாயிருந்தது அது!

அவன் எப்படி இறந்தான்?

'போலீஸ் ரிபோர்ட்' அவருக்குப் பதில் சொல்லிற்று: அவன் வழி நடைப் பாதையிலே, கொட்டும் மழையிலே, குளிரிலே விறைத்துக் கிடந்தான் என்று!

★

அவன் அரசியல் கொந்தளிப்பில் குதித்து அதிகார வர்க்கத்துடன் போராடி அம்பலத்துக்கு வந்தவனல்ல; பெரும் புகழும் பெற்ற பிரமுகனல்ல; காரிருளில் ஒரு மின்னல் போல் கலைவானில் தோன்றி மறைந்த கலைஞனுமல்ல; சர்வ சாதாரணமான தொழிலாளி!

பார்க்கப் போனால் அந்த முறையில் அறிமுகப் படுத்துவதற்குக் கூட அவன் அருகதையற்றவன்தான். தொழிலாளிகளுக்காவது வேலை செய்வதற்கென்று ஒரு தனி இடமுண்டு; அவர்களுடைய வேலைக்குக் கூலி இவ்வளவுதான் என்று நிச்சயமாக உண்டு; வசதியுடனோ, வசதியில்லாமலோ அவர்கள் வசிப்பதற்கு வாடகைக்காவது ஒரு சின்னஞ் சிறு அறை உண்டு; ஆனால் அவனுக்கோ!

இந்த உலகத்தில் எதுவுமே நிச்சயமில்லை.

இந்த உலகத்தில் யாருக்குமே எதுவுமே நிச்சயமில்லைதான்;—அப்படித்தான் வேதாந்திகள் சொல்கிறார்கள்.

ஆனால், அந்த வேதாந்திகள் தங்குவதற்கு மட்டும் சகல சௌகரியங்களும் பொருந்திய எத்தனையோ மடங்கள் சர்வ நிச்சயமாக இருக்கின்றன; சாப்பாட்டு விஷயத்திலோ சாம்ராஜ்யாதிபதிகள் கூட அவர்களிடம் சரணாகதியடைய வேண்டும்!

மோட்ச சாம்ராஜ்யத்தில் தாங்கள் வகிக்கப் போகும் பதவிக்காக, முன் கூட்டியே அவர்களுக்கு லஞ்சம் கொடுத்து வைக்கும் மகானுபாவர்கள் எத்தனையோ பேர் இருக்கும்போது, அந்த வேதாந்திகளுக்கு இந்த அநித்தியமான உலகத்தில் எதைப் பற்றித்தான் என்ன கவலை?

ஆனால், அந்தப் பரிதாப ஜீவனுக்கோ? எத்தனையோ கவலைகள்!

விடிந்தால் வேலை கிடைக்குமா என்று கவலை; வேலை கிடைத்தால் கூலி கிடைக்குமா என்று கவலை; கூலி கிடைத்தால் சோறு கிடைக்குமா என்று கவலை; அதுவும் கிடைத்தால் 'அப்பாடி!' என்று சற்று நேரம்



"பையனுடைய பிறந்த நாள் கொண்டாட்டத்துக்குச் சிநேகிதர்களெல்லாரையும் கூப்பிட்டு ஒரு விருந்து வைக்கலாம்னு பார்க்கிறேன்."

"இந்த ரேஷன் காலத்தில் எதுக்கு சிநேகிதர்களையெல்லாம் கூப்பிடுகிறீர்கள்? பேசாமல் சொந்தக்காரர்களோடு நிறுத்திக் கொள்ளுங்கள்."

"சிநேகிதர்களை விட சொந்தக்காரர்கள் தான் ஜாஸ்தி. அதற்குத்தான் சிநேகிதரோடு நிறுத்திக்கலாம்னு பார்க்கிறேன்."

விழுந்து கிடக்க எங்கேயாவது கொஞ்சம் இடம் கிடைக்குமா என்று கவலை!

"குடை ரிப்பேர், குடை ரிப்பேர்!" என்று தெருவோடு கூவிக்கொண்டு போவான்; கூப்பிட்ட வீட்டுக்குள் நுழைவான்; கொடுத்த வேலையைச் செய்வான். "கூலி என்னடா வேண்டும்?" என்றால், "கொடுக்கிறதைக் கொடுங்க, சாமி!" என்பான்.

ஆனால், சிலரிடம் அவன் வேலை செய்த கூலிக்காக வம்புக்கு நிற்பதும் உண்டு; மல்லுக்கு நிற்பதும் உண்டு; எப்படித்தான் நின்றாலும் ஏமாந்து வருவது முண்டு!

கிடைத்த காசுக்கு ஏற்றவாறு அவன் தானே சமைத்துச் சாப்பிடுவது வழக்கம். எங்கே? — வீதியோரங்களில் இருக்கும் நடைப் பாதையில்!

தீயர்கள், திருடர்கள், தீராத நோயாளிகள் இவர்களின் மத்தியிலே உழைப்பாளியான அவனும் உயிருக்கு மன்றாடிக் கொண்டு வாழ்ந்து வந்தான்.

அவன் தன் வயிற்றுப் பிழைப்பை யொட்டி வழக்கம் போல் வீதிகளில் பவனி வரும்போது, சில வீடுகளின் முன் சுவரில் பின் வருபவை போன்ற கல் வெட்டுகள் காட்சியளிக்கும்:

"1930ஞு மேமீ 7உ மொட்டையம்மன் தேவஸ்தானத்துக்கு முல்லைவனம் ஸ்ரீ முருகேச முதலியார் பாரியாள் ஸ்ரீமதி முத்தம்மாள் எழுதி வைத்த வீடு."

இந்தக் கல் வெட்டுகளைப் படிக்கும்போது அவனையும் அறியாமல் அவனுக்குச் சிரிப்புச் சிரிப்பாய் வரும், பாவம்!

இந்தக் கதியற்ற 'குடை ரிப்பேர்' குப்புச் சாமிக்கும், டாக்டர் ரங்க ராவ் அவர்களுக்கும் என்ன சம்பந்தம்?

★

காற்றும் மழையும் ஒரு நாள் கலந்தடித்த போது, தான் வழக்கமாகத் தங்கியிருக்கும் வழி நடைப் பாதையில், படுப்பதற்காகப் பழைய கோணிக் கந்தையொன்றை உதறிப் போட்டுக் கொண்டிருந்தான் குப்புச்சாமி.

வானத்தில் சந்திரன் இல்லை; வீதிகளில் விளக்குகள் இல்லை.

ஏற்கெனவே அவனுக்கு இரண்டு நாளாய்க் காய்ச்சல். சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் 'மிக்சர்' என்று சொல்லி அநுயாசமாக ஊற்றிக் கொடுக்கும் 'வர்ணத் தண்ணீ'ரை வாங்கிக் குடித்துக் கொண்டிருந்தான். குணம்தான் அவன் உயிரோடு இருக்கும் வரை தெரியப் போவதில்லையே!

இந்த லட்சணத்தில் மனிதர்களைப் போல் தன்னை வஞ்சிக்காத காற்று மழையின் கருணையை எண்ணி அவன் மகிழ முடியுமா? வேதனையுடன் விழுந்தடித்துக் கொண்டு ஓடினான். வீடு வீடாகச் சென்று எட்டிப் பார்த்தான். படியில், நடையில், வழியில், வராந்தாவில் — எந்த மூலையிலாவது கொஞ்சம் இடம் கிடைக்காதா என்று!

"அம்மா!", "ஐயா!" என்று வாசலில் நின்றபடியே அலறினான். ஆனாலும் என்ன?



"ஐயோ!" என்று இரங்குவாரில்லை; "வா!" என்று வழி விடுவாரும் இல்லை!

எத்தனையோ ஓட்டுத் திண்ணைகள் அவனை 'வா, வா!' என்று அழைப்பது போலிருந்தது; ஆனால், வாசற் கதவுகள் வழி மறித்து நின்றன.

அங்கு மிங்குமாக அலைந்து அலைந்து அலுத்துப் போன அவனுக்கும் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

அருகிலிருந்த ஒரு வீட்டின் கதவைப் பலமாகத் தட்டினான்!

அந்த வீட்டுக்காரர் தான் டாக்டர் ரங்க ராவ். யாரோ நோயாளி தான் இந்த நேரத்தில் வந்து கதவை இடிக்கிறானக்கும் என்று நினைத்துக் கொண்டு, "யாரப்பா, அது?" என்று சாவதானமாகக் கேட்டார்.

"நான்தான் குப்புச்சாமிங்க!"

டாக்டருக்குச் சிரிப்பு வந்து விட்டது! "ஏனப்பா! உன்னையும் ஆட்லி, ட்ருமன் மாதிரி உலகமே அறிந்திருக்குமென்று நினைத்துக் கொண்டாயா?" என்று கேட்டார் படுக்கையில் கிடந்தபடியே.

"நான் ஏன் சாமி, அப்படி யெல்லாம் நினைச்சிக்கிறேன்? வெளியே காத்தும் மழையும் கலந்தடிக்குது; உங்க வீட்டுத் திண்ணை மேலே கொஞ்சம் இடம் கொடுத்தீங்கன்னா, இராப்பொழுதைக் கழிச்சுடுவேன்!" என்றான் குப்புச்சாமி.

இப்பொழுதுதான் டாக்டருக்கு விஷயம் விளங்கிற்று. உடனே அவர், "என்னடா இது சத்திரமா?" என்று உறுமினார்.

"சொல்லப்போனா சத்திரந்தானே, சாமி! இருக்கிற வரைதானே இந்த வீடு, வாசல் எல்லாம்......" என்று தனக்குத் தெரிந்த வேதார்த்தத்தை அவருக்குப் போதிக்க ஆரம்பித்தான் குப்புச்சாமி.

அவ்வளவுதான்; அடுத்த நிமிஷம் சாத்தியிருந்த கதவு 'தடா'லென்று திறந்தது. வராந்தாவிலிருந்த மின்சார விளக்கு 'குப்' பென்று எரிந்தது. பசியால் வாடி, மழையால் நனைந்து, குளிரால் நடுங்கி நின்ற குப்புச்சாமியின் தோற்றம் கூட டாக்டர் ரங்கராவின் ஆத்திரத்தை அடக்கவில்லை. "அவ்வளவு திமிரா, உனக்கு?" என்று சீறிக்கொண்டே அவர் வாயு வேகத்தில் அவனுடைய கழுத்தில் கையை வைத்தார்; அடுத்த கணம் தெரு வீதியில் கொட்டும் மழையில் அவன் குப்புற விழுந்தான்!

கதவைப் 'படா'ரென்று சாத்திய சத்தமும், விளக்கை 'டக்' என்று அணைத்த ஓசையும் கேட்கும் வரைதான் அவனுடைய உடம்பில் உயிர் இருந்தது!

★

இந்தச் சம்பவம் டாக்டர் ரங்கராவின் ஞாபகத்துக்கு வந்ததும், அவருடைய உள்ளம் பதைத்தது. நியாயத்துக்கு விரோதமாகத் தம்முடைய தீர்ப்பில் "இயற்கை மரணம்" என்று எழுதும்போது அவருடைய மனச்சாட்சி அவரை வதைத்தது. அந்த வேதனையுடன் அவர் யந்திரம் போல் தம்முடைய வேலைகளை அன்று எப்படியோ கவனித்துவிட்டு வீட்டுக்குத் திரும்பினார்.

அன்றிரவும் அடாத மழை பெய்தது.

முன்னிரவு நடந்ததுபோல் அன்றிரவும் இரண்டொரு நடைப்பாதை வாசிகள் வந்து அவருடைய வீட்டுக் கதவை இடித்தனர்.

என்ன விந்தை இது!

இன்று அவருக்கு ஆத்திரம் வரவில்லை; அமைதியுடன் எழுந்து வந்தார்.

கதவு திறந்தது!

அவருடைய கையும் அன்றிரவு யாருடைய கழுத்தையும் தீண்டவில்லை!

## இன்னும் மோசம்!

அறுபது வருஷங்களுக்கு முன்பு இங்கிலீஷ் பார்லிமெண்டில் பின் வருமாறு ஒரு விவாதம் நடைபெற்றது:—

"இன்ன ஊரின் கனம் மெம்பர் ...... அவர்கள் கழுதை மேய்க்கக்கூட லாயக்கில்லாதவர். அவர் இந்தச் சபையில் ஒரு அங்கத்தினரா யிருப்பது கண்டு மிகவும் வருந்துகிறேன்" என்றார் ஒரு அங்கத்தினர்.

"ஒழுங்கு, ஒழுங்கு; மன்னிப்புக் கேட்க வேண்டும். வாபஸ் வாங்க வேண்டும்" என்றார் மற்றொரு அங்கத்தினர்.

உடனே அந்த அங்கத்தினர், "நான் வாபஸ் வாங்கிக் கொண்டு மன்னிப்பும் கேட்டுக் கொள்கிறேன். குறிப்பிட்ட வேலையைச் செய்ய மேற்படி கனம் மெம்பர் பூர்ண தகுதியும் உடையவர் என்று ஒப்புக்கொள்கிறேன்" என்றார்.

# சிநேகத்துக்கு ஆரம்பம்

கடையில் அமர்ந்து பலதரப்பட்ட வாடிக்கைக்காரர்களுடன் வியாபாரம் செய்ய வேண்டியிருக்கிறது. சிலருடன் பேரம் செய்வது சுலபம், சிலருடன் செய்வது கடினம். சில சமயங்களில் காரணமின்றியே பேச்சு வார்த்தை நின்று விடுகிறது. மௌனம் நிலவுகிறது. சொல்வதற்கு ஒன்றும் தோன்றுவதில்லை. அந்த சமயத்தில் உங்களுக்குப் பிரியமான வர்ஜீனியா நெ. 10 சிகரெட் ஒன்றை வாடிக்கைக்காரருக்கு அளிக்கிறீர்கள். மறு கணமே நிலைமை மாறுகிறது. சிநேகபாவம் ஏற்படுகிறது. இச் சிறிய உபசரிப்பால் திருப்திகரமான வியாபாரத் தொடர்பு ஆரம்பமாகிறது.



## நம்பர் டென்
## வர்ஜீனியா

சிறந்த சிகரெட்

ஜேம்ஸ் கார்ல்டன் லிமிடெட், லண்டன்

NTK 132 TM



# தங்கச் சுரங்கம்

— எல்லிஸ் ஆர். டங்கன் —

[அழகும் அதிர்ஷ்டமும் வாய்ந்த சமஸ்தானம் ஒன்று உண்டென்றால் அது மைசூர் சமஸ்தானம்தான். சௌந்தரியத்துக்குப் பெயர்போன மேற்படி சமஸ்தானத்திற்கு ஆண்டவன் இருவித இயற்கை வசதிகளை அளித்திருக்கிறார். ஒன்று காவேரித் தேக்கம்; மற்றொன்று கோலார் தங்க வயல்.

பெங்களூருக்கு 50 மைல் தூரத்திலுள்ள மேற்படி தங்க வயலை நமது பிரசித்த சினிமா டைரக்டர் எல்லிஸ் ஆர். டங்கன் போய்ப் பார்த்துவிட்டு வந்து கூறும் ரஸமான விவரங்களையும் அவர் பிடித்துக் கொண்டு வந்த படங்களையும் இங்கு மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம்.]

கோலார் மலைப் பிரதேசங்களில் நான்கு சுரங்கங்கள் இருக்கின்றன. அவற்றுக்கு நந்திதுர்க், ஊர்காம், சாம்பியன் ரீப், மைசூர் சுரங்கம் என்று பெயர். இந்த நான்கு சுரங்கங்களில் மைசூர் சுரங்கம் 8000 ஏக்கர் விஸ்தீரணமுள்ள மிகவும் பெரிய சுரங்கமாகும். ஊர்காம் சுரங்கமோ உலகத்திலேயே மிகவும் ஆழமான சுரங்கம் என்று சொல்லப்படுகிறது. சாம்பியன் ரீப் சுரங்கத்தில்தான் உலகத்திலேயே மிகவும் ஆழமான பாதாள பிலத்துவார இயந்திரம் இருக்கிறது. முதலில் நான் சாம்பியன் ரீப் சுரங்கத்தைப் பார்க்க விரும்பினேன்.

சாம்பியன் ரீப் பாதாள பிலத்துவாரத்துக்குப் போவதற்கு முன்னால், கம்பெனி அதிகாரிகள் என்னிடம் ஒரு தஸ்தவேஜைக் காட்டி அதில் கையெழுத்துப் போடும்படி சொன்னார்கள்.

அந்தத் தஸ்தவேஜை வாசித்துப் பார்த்தேன். "கீழே போகிறவர்களுடைய உயிருக்கோ உடம்புக்கோ ஏதாவது ஆபத்து சேர்ந்தால் அதற்குக் கம்பெனி பொறுப்பு அல்ல" என்று அதில் எழுதியிருந்தது.

தஸ்தவேஜியில் கையெழுத்துப் போட்டு, கம்பெனியை அந்த மகத்தான பொறுப்பிலிருந்து நான் விடுதலை செய்தேன்! பிறகு ஒரு சுரங்கத் தொப்பியும் சுரங்க விளக்கும் என்னிடம் கொடுத்தார்கள். தொப்பியைத் தலையில் அணிந்துகொண்டு விளக்கைக் கையில் பிடித்தவாறு இயந்திரத்தில் அமர்ந்தேன். இயந்திரம் மணிக்கு முப்பது மைல் வேகத்தில் கீழே சென்றது. பிலத்துவாரத்தின் குறுக்களவு 18 அடியாகும். சுற்றிலும் செங்கல்லால் அழகாகக் கட்டியிருந்தார்கள்.

ஏறக்குறைய அடிவாரத்துக்குப் போனதும், குளிர் காற்று ஜிலுஜிலுவென்று பிலத்துவாரத்திற்குள் புகுவதை உணர்ந்தேன்.

இயந்திரங்கள் ஓயாமல் வாயுவைக் குளிராக்கிக் குளிர் காற்றை உண்டாக்கிக் கொண்டே இருப்பதால், பூமிக்குக் கீழே

எவ்வளவு தூரத்திலும் உஷ்ணம் அதிகமாகத் தோன்றுவதில்லை. இதனால் தொழிலாளர்கள் வேலை செய்வதற்குச் சௌகரியமா யிருக்கிறது.

யுத்தத்துக்கு முன்னால் மேற்படி நான்கு சுரங்கங்களில், நந்தி துர்க்கம், ஊர்காம், சாம்பியன் ரீப் இந்த மூன்று சுரங்கங்களில் மட்டுமே வாயுவைக் குளிர்ச்சியாக்கும் இயந்திரங்கள் அமைக்கப்பட் டிருந்தனவாம். மைசூர் சுரங்கத்தில் அப்போது அந்த இயந்திரம் கிடையாதாம்.

சாம்பியன் ரீப் சுரங்கத்தின் ஒரு மூலையில், "இப்போது நீங்கள் ஒன்றேகால் மைல் தூரம் வந்திருக்கிறீர்கள். இது கடல் மட்டத்திற்கும் 3163 அடி கீழே யிருக்கிறது" என்று எழுதி யிருக்கிறது. இப்படி 100 அடிக்கு ஒரு தடவை நம்மை எச்சரித்துக் கொண்டே யிருக்கிறார்கள்.

சாம்பியன் ரீப் சுரங்கத்தின் அடிமட்டத்தின் கோடிவரை சென்றதும் சுவர்களில் தங்கச்சாயல் வீசியது. அந்தத் தங்கச் சுவர்களிலிருந்து வெட்டப்படும் மூலப் பொருள்களைச் சுத்தம் செய்து பண்படுத்தியே தங்கம் திரட்டப் படுகிறதாம். மேற்படி விலை மதிக்க முடியாத தங்கச் சுவர் சுமார் ஆயிரம் அடி நீளத்துக்குப் பரவி யிருக்கிறது அதாவது அந்தச் சுவரில் ஒரு டன் வெட்டி எடுத்தால் ஒரு அவுன்ஸ் தங்கம் தேறுகிறதாம். மற்ற மூன்று சுரங்கங்களைக் காட்டிலும் சாம்பியன் ரீப் சுரங்கமே அதிகத் தங்கம் தருவதாகச் சொல்கிறார்கள். அதாவது மற்ற இடங்களில் டன்னுக்கு 25 ரூபாய் பொன் கிடைத்தால் இங்கே 50 ரூபாய் பொன் கிடைக்கிறதாம்.

சாம்பியன் ரீப் சுரங்கத்தைப் பார்த்து முடித்ததும் அங்கே சில புகைப் படங்களை எடுத்துக் கொண்டு வெளியே வந்து சேர்ந்தேன்.

அப்போதுதான் சுரங்கத் தொழிலாளர்களும் தங்கள் வேலையை முடித்து விட்டு வெளியே வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் உடம்பெங்கும் தூசி மயமாக இருந்தது. இந்தச் சுரங்கங்களில் தொழிலாளர்கள் இரு 'ஷிப்டு'களாக வேலை செய்கிறார்கள். ஒரு ஷிப்ட் காலை ஏழு மணியிலிருந்து பிற்பகல் மூன்று மணி வரையிலும், இன்னொரு 'ஷிப்ட்' பிற்பகல் மூன்று மணியிலிருந்து இரவு 11 மணி வரையிலும் வேலை செய்கிறது.

மூலப் பொருள்களிலிருந்து தங்கத்தைத் தனியே பிரித்தெடுப்பதற்காக உடைக்கும் உருக்கும் வேலை மட்டும் இரவு 11 மணிக்கு மேலேயே நடக்கிறது. அப்போது சுரங்கத்தில் சிலரே இருப்பார்கள். சுரங்க வேலைகளில் இதுவே மிகவும் அபாயகரமான வேலை. காரணம் மூலப்பொருள்களை வெடி வைத்து உடைத்துப் பொடி செய்து உருக்கப்படுவது அந்த நேரத்தில்தான். சிதறிய தூள்கள் கீழே விழுந்து படிவதற்கு நாலு மணி நேர அவகாசம் தேவையா யிருக்கிறதாம். இதற்குள் மறுபடியும் பொழுது விடிந்து மறுநாள் வேலை தொடங்கி விடுகிறார்கள். இவ்வளவு சிரமப்பட்டு வேலை செய்யும் சுரங்கத் தொழிலாளர்கள் ஒரு மாதத்தில் 26 நாள் வேலை பார்க்கிறார்கள். அவர்களுக்கு ஒரு நாளைக்கு 11 அணா சம்பளம். சமீபத்திலே அங்கும் ஒரு வேலை நிறுத்தம் நடந்து அமளி துமளிப் பட்டுக்



தங்கச் சுவர்களை வெடி வைத்துப் பொடி செய்கிறார்கள். சுரங்க வேலையிலேயே இதுதான் மிகவும் ஆபத்தான வேலை. வெடிக்கும் தூள்கள் சிதறாமலிருக்கும் பொருட்டு மரக்கட்டைகளை முட்டுக் கொடுத்திருப்பதைப் படத்தில் காணலாம்.



தங்கச் சுவர்களிலிருந்து வெட்டப்படும் மூலப் பொருள் களை இயந்திரங்களில் உடைத்துப் பொடி செய்யும் பொருட்டு வண்டியில் போட்டு எடுத்துச் செல்கின்றனர்.

கொண்டிருந்தது அல்லவா? அதற்குப் பிறகு ஒவ்வொரு தொழிலாளியின் சம்பளமும் இரு மடங்காயிற்று. இதைத் தவிர சகாய நிதியும் பஞ்சப்படியும் போனஸ்களும் இருக்கின்றன. ஒவ்வொரு தொழிலாளிக்கும் சம்பளத்தைத் தவிர மாதம் ஒன்றுக்கு 10⅓ ரூபாய் பஞ்சப்படியும் ஆறர் போனஸ் காலணா ரூபாயும் கிடைக்கிறது.

சம்பளம், பஞ்சப் படி இவற்றைத் தவிர சுரங்கத் தொழிலாளர்களுக்கு இதர குடியிருப்பு வசதிகளும் வாழ்க்கை வசதிகளும் கம்பெனியில் செய்து கொடுத்திருக்கிறார்கள். எல்லாச் சுரங்கங்களும் ஒரே கம்பெனியின் கீழ் நடந்து வந்த போதிலும் ஒவ்வொரு சுரங்கத்துக்கும் தனித்தனியாகத் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். இயந்திரங்களும் இருக்கின்றன.

இங்கே வசிக்கும் சுமார் 14000 சுரங்கத் தொழிலாளர்களில் பெரும்பான்மையோர் தமிழ் ஹரிஜனங்கள். அவர்களுக்குச் சுரங்கத் தொழில் புதிதல்ல. அவர்கள் தலைமுறை தலைமுறையாகச் சுரங்கத் தொழில் பார்ப்பவர்கள்.

மைசூர் சுரங்கத் தொழிலாளர்களுக்காகக் கம்பெனியில் ஒரு பெரிய 'காலனி'யே கட்டி விட்டிருக்கிறார்கள். சுமார் 13000 குடிசைகள் கட்டிக் கொடுத்து மாதம் எட்டு அணா வாடகையே வாங்கிக் கொள்கின்றனர். காலனியில் மின்சார விளக்குகள், சுகாதார வசதிகள் எல்லாம் செய்து கொடுத்திருக்கிறார்கள். முக்கால்வாசித் தொழிலாளர்கள் இந்தக் காலனிகளிலேதான் வசித்து வருகிறார்களாம்.

தொழிலாளர்களின் சுகாதாரத்தைக் கவனிக்க ஒரு தனி சுகாதாரக் கமிட்டி வேலை செய்கிறது. இன்னும் ஆஸ்பத்திரிகள், சிறுவர்களுக்கு வேண்டிய இலவசப் பள்ளிக்கூடங்கள், சினிமாக்கள், விளையாட்டு மைதானங்கள் எல்லாம் இருக்கின்றன.

இத்தனை வசதிகளும் போதிய வருமானமும் இருந்துங்கூட தொழிலாளர்களில் பெரும்பான்மையோர் கடனாளிகளாகவே இருக்கின்றனர். காரணம் குடிப் பழக்கம்தான். வருமானத்தில் மூன்றில் ஒரு பங்கு குடிப்பதிலேயே தீர்ந்து விடுகிறது. இதனால் அதிக வட்டிக்குக் கடன் வாங்கிக் கஷ்டப்படுகிறார்கள். இதற்காகக் குறைந்த வட்டியில் கடன் கொடுக்கும் பொருட்டு மைசூர் தொழில் சங்கத்தார் கடன் சொஸைடி ஒன்றை நிறுவியிருக்கிறார்கள்.

பொதுவாகச் சுரங்கத் தொழிலாளர்களுக்கும் கம்பெனி முதலாளிகளுக்குமிடையே பரஸ்பர ஒத்துழைப்பும் அன்பும் இருந்து கொண்டிருக்கிறது. எனினும் யுத்தம் ஆரம்பித்த பிறகு இதுவரை அங்கே மூன்று வேலை நிறுத்தங்கள்தான் நடந்திருக்கின்றன! எல்லாம் பஞ்சப்படி சம்பந்தமாக நடந்த வேலை நிறுத்தங்கள்தான்.

* * *

ஊடையோகப் புறப்படும்போது தங்கம் உருக்கும் இடத்தைப் பார்ப்பதற்காகப் போயிருந்தேன்.

உற்பத்தி செய்யும் தங்கத்தை மாதத்துக்கு இரு முறை நீண்ட பெரிய கட்டிகளாக வார்ப்பது வழக்கமாம்.



உடைத்துப் பொடி செய்து, வடிக் கட்டி உருக்கிக் கடைசியில் தங்கமாய் வெளி வருகிறது.

அவ்விதம் வார்க்கப்பட்ட தங்கக் கட்டிகளை ஓர் அறையில் போட்டுப் பந்தோபஸ்தாகப் பூட்டி வைத்து, பின்பு போலீஸ் பாதுகாப்பில் பம்பாயிலுள்ள தங்கச்சாலைக்கு அனுப்புவார்களாம். தங்கச்சாலையில் முக்கிய பரிசோதனையெல்லாம் நடந்த பிறகு பம்பாய்த் தங்க மார்க்கெட்டில் விற்பனைக்குப் போகும்.

அவ்விதம் வார்க்கப்பட்ட தங்கக் கட்டிகளில் ஒன்றைக் கம்பெனியார் எனக்குக் காட்டினார்கள். அதை ஒரே கையால் என்னால் தூக்க முடியுமானால், தூக்கிக் கொண்டு போய்விடலாமென்று என்னிடம் கூறினார்கள். ஆனால், நானே இரண்டு கையாலும் தூக்கிப் பார்த்தேன்; முடியவில்லை. ஒரு வகையில் அது கம்பெனிக்கு நல்லதாகப் போயிற்று. ஏனெனில், அதை நான் தூக்கிக்கொண்டு போய்விட்டால், அந்த நான்கு கம்பெனிகளும் ஒரு வருஷ முழுவதும் அரும்பாடு பட்டுச் சம்பாதித்த மொத்த லாபத்தில் மூன்றில் ஒரு பகுதி அந்தக் கம்பெனிகளுக்கு நஷ்டமாகி விடும். பாவம், அப்புறம் கம்பெனிக்காரர்கள் என்ன செய்வார்கள்? சென்ற வருஷம் அந்த நான்கு சுரங்கங்களும் உற்பத்தி செய்த மொத்தத் தங்கத்தின் பெறுமானம் 28 லட்சம் பவுனாகும். இதில் செலவு 14 லட்சம் ஆயிற்று. மைசூர் சர்க்காருக்கு வரி கொடுத்தது போக, கம்பெனிக்கு 30,000 பவுன் லாபம் கிடைத்தது. கோலாரிலே சுரங்கத் தொழில் ஆரம்பமான காலத்திலிருந்து இதுவரை, அதாவது சென்ற 61 வருஷ காலத்திற்குள் இந்த நான்கு சுரங்கங்களும் ஏறக்குறைய 10 கோடி பவுன் மதிப்புள்ள தங்கத்தை உற்பத்தி செய்திருக்கின்றன. இந்நான்கு சுரங்கங்களின் மூலம் மைசூர் சமஸ்தானத்துக்கு வருஷத்தில் 2 கோடி ரூபாய் வருமானம் கிடைக்கிறது.

★ ○ ★

## முதல்தர ஏற்பாடு

பூலோகக் குபேரர்களில் ஒருவரான ராக்பெல்லர் மாளிகைக்கு ஒரு சமயம் இரண்டு யாசகர்கள் சென்றார்கள். அவர்களில் ஒருவன், "பணக்காரர்களை அணுகி அவர்களை எப்படி வசியப்படுத்துவது என்பது எனக்குத் தெரியும். ஆகையால் நான் முதலில் போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று சொல்லி உள்ளே பிரவேசித்தான்.

பிரபுவின் தரிசனம் அவனுக்குக் கிடைத்தது. இவன் சொன்னதையெல்லாம் பிரபு ரொம்பவும் பொறுமையோடு கேட்டுக் கொண்டிருந்தார். கடைசியில், காரியதரிசியை மணி அடித்து வரவழைத்தார். காரியதரிசி யாசகனை அழைத்துக் கொண்டுபோய்க் கணக்குப் பிள்ளையிடம் ஒப்படைத்தார். கணக்குப் பிள்ளை அவனைப் பத்திரமாகத் தானா அதிகாரியிடம் அனுப்பினார். தானா அதிகாரி வாயில்காப்போனிடம் கொண்டு விட்டார். வாயில்காப்போன் யாசகனை வெளியே அனுப்பினான். "என்ன கிடைத்தது?" என்று வெகு ஆவலுடன் கேட்டான் வெளியே காத்துக் கொண்டிருந்த இன்னொரு யாசகன்.

"ஒன்றும் கிடைக்கவில்லை; இருந்தாலும் உள்ளே ஏற்பாடுகள் எல்லாம் முதல் தரமாயிருக்கின்றன" என்று பதில் கூறினான் உள்ளே போய் வந்த யாசகன்.

# காலக்ஷேபம்

### அட பாவமே!

டாக்டர்:—இந்த மாத்திரையைக் கடித்துச் சாப்பிட்டால் பல்லுக்குப் பலம் வரும்.

நோயாளி:—முதலில் இந்த மாத்திரையைக் கடிக்கப் பல்லில் பலம் வேண்டுமே!

—ஏ. சேஷன்.

★

### ஒன்றுமில்லையா?

ஒருவர்:—இந்தக் குடையை ரிப்பேர் செய்து தருவாயா, சாயபு? அவசியமான ரிப்பேர்களை மாத்திரம் பார்த்துச் செய்வேன்.

சாயபு (குடையை வாங்கிப் பார்த்து விட்டு):—ஒன்றுமில்லே, சாமி! மத்திக் குச்சி மகா மோசமாய் இருக்கிறது; அதை மாத்தணும். அப்புறம் கம்பிகளெல்லாம் எடுத்து விட்டுப் புதிசு போட்டு மேல் துணிக்குப் புதுத் துணி போடணும்; அவ்வளவுதான்!

—எச். பி.

★

### நல்ல யோசனை

ஓட்டல் முதலாளி:—என்ன ஓய்! உம்ம கடையில் நான் வாடிக்கையாக எண்ணெய் வாங்குகிறேன். ஆனால் நீர் மாத்திரம் பக்கத்துக் கடையில் தினமும் காப்பி சாப்பிடுகிறீரே, இது உமக்கு நியாயமா?

எண்ணெய்க் கடைச் செட்டியார்:—கோபிச்சுக்காதேயும், அந்தக் கடையிலாவது கலப்பில்லாத சுத்தமான எண்ணெயில் பலகாரங்கள் செய்யப்படலாம் என்று எண்ணித்தான் போகிறேன்.

—தெனன்றீ.

★

### ஆச்சரியம்!

குண்டு:—டேய்! நம்ம செட்டியார் இந்த ஊருக்கு வந்தபோது அவரிடம் ஒரு வேஷ்டி கூடக் கிடையாது. இப்போது இரண்டு லட்சம் வைத்திருக்கிறார்.

மண்டு:—அடே யப்பா! ஆச்சரியமான்னு இருக்கு! அவ்வளவு வேஷ்டிகளையுமா அவர் கட்டிக் கொள்கிறார்?

—பி. பி. சங்கரராஜன்.

★

### அண்டப் புளுகன்

"என்ன ஸார்! அந்தத் திருட்டுப் பயலையா உம்ம கம்பனியிலே வேலைக்கு வைத்துக் கொண்டீர்? திருடிவிட்டு ஐந்து வருஷம் ஜெயிலுக்குப் போனவனாச்சே அவன்?"

"அப்படியா? அவன் பெரிய அண்டப் புளுகன் போலிருக்கே! என்னிடம் மூன்று வருஷம் என்றுதானே சொன்னான்?"

—டி. எஸ். திருவேங்கடம்.

### ஏமாந்தது யார்?

வந்தவர்:—வக்கீல் ஸார், ஒரு பையன் கல் விட்டு ஜன்னல் கண்ணாடியை உடைத்து விட்டான். என்ன செய்யலாம், சொல்லுங்கள்.

வக்கீல்:—அந்தப் பையனின் தகப்பனார் மீது நஷ்டஈடு வழக்குத் தொடருங்களேன்!

வந்தவர்: ரொம்ப சரி, அவன் உங்களுடைய பையன்தான். கொடுங்கள் ஐந்து ரூபாய், சீக்கிரம்!

வக்கீல் (அனுயாசமாக):—ஓஹோ! அப்படியா? தாங்கள் சீக்கிரம் மூன்று ரூபாய் கொடுங்கள்; என் "பீஸ்" எட்டு ரூபாய்!

—என். பஞ்சாபகேசன்

★

### தெரிந்து விடுமே!

ஒருவர் (ஒரு போட்டோவைக் கொடுத்து): இதைப் பெரிசு செய்து தரவேண்டும். தலைப்பாகையை மட்டும் எடுத்துவிட வேண்டும்.

சித்திரக்காரர்:—செய்து தரலாம்; ஆனால் தலையில் கிராப்பா, குடுமியா, அல்லது வழுக்கையா என்று ஒன்றும் தெரியவில்லையே!

படம் கொடுத்தவர்:—அதற்கென்ன ஸார் தலைப்பாகையை எடுத்தவுடன் தெரிந்து விடுகிறது.

—பி. வி. ரங்கராஜன்

★

### நொண்டிச் சாக்கு

உபாத்தியாயர்:—என்னடா ராமு! நேற்றிரும் பள்ளிக்கூடம் வரவில்லையே. அதற்கு ஏதாவது நொண்டிச் சாக்கு தயாரித்துக் கொண்டு வந்தாயா?

ராமு:—இல்லீங்க ஸார்! நேற்று விளையாடும்போது கால் சுளுக்கிக் கொண்டது. அதனால் நடந்து வரமுடியவில்லை!—கே. மோஹன்



"என்ன ஸார்! பையனைக் காலேஜில் சேர்த்தாச்சா?"

"அதை ஏன் கேட்கிறேன்? காலேஜில் அவர்கள் பாட்டுக்கு நானூறு, ஐந்நூறு கேட்கிறார்கள்."

"அதுக்கு என்ன ஸார் பண்றது? பையனைச் சேர்க்கணும்னு எங்கேயாவது கடன் வாங்கித்தான் சேர்க்கணும்?"

"மார்க்கை எப்படி கடன் வாங்குவது?"

# 805 லக்ஷம் கப் டீ






சண்டை எவ்வளவுக் கெவ்வளவு கடுமையாக இருக்கிறதோ, வாழ்க்கை சாதனங்கள் எவ்வளவுக் கெவ்வளவு மோசமாக இருக்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு அதிகமான டீ ராணுவத்தைச் சேர்ந்த ஆண் பெண்களுக்குத் தேவையாகிறது.

தங்களால் முடிந்தவரையில் டீ சப்ளை செய்ய வேண்டுமென்பதே இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரின் ஒரே நோக்கம். பல வழிகளிலும் இந் நோக்கம் ஈடேறி வருகிறது. ஊர் ஊராகச் செல்லும் டீ கார் மிகப்பலனளித்த வழிகளில் ஒன்று.

மேற்கே எகிப்திலிருந்து கிழக்கே ரங்கூன்வரை - மத்திய கிழக்கு, இந்தியா, அஸ்ஸாம், பர்மா பூராவும் - இந்த கார்கள் உற்சாகமும் உடல் சுகமும் எங்கெங்கு அதிகமாகத் தேவையோ அங்கெல்லாம் சென்று உதவியளித்திருக்கின்றன.

துறைமுகத்திலிருந்து தண்டு வரை, சண்டை நடக்குமிடமிருந்து ஆயிர மைல் தூரமுள்ள இடங்களிலிருந்து துப்பாக்கி சத்தம் கேட்கும் இடம்வரை, எங்கு தேவையிருந்தாலும், எமது டீ கார்கள் நமது போர் வீரர்களுக்கு இலவசமாக வற்றாத ஆறுபோல் டீயை உவந்து அளித்து வந்தன. 1945ம் செப்டம்பர் 30வரை டீ கார்கள் மூலமாக மட்டும் போர்டார் 805 லக்ஷம் கப் டீ இலவசமாக அளித்திருக்கின்றனர்.

எமது சேவையை ஏற்றுக்கொண்டோரின் வந்தனங்கள்தான் எமது கைம்மாறு.

இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டு டீ கார்களின் பூரா கதையும் மிக சுவாரஸ்யமானது. "Tea at the Front" (போர்முனையில் டீ) என்ற சிறு புத்தகம் சமீபத்தில் வெளியாகியிருக்கிறது. கீழ்க்கண்ட விலாசத்தாருக்கு எழுதினால் இலவசமாக ஒரு பிரதி அனுப்புவார், கமிஷனர், இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டு, 101, கிளைவ் தெரு, கல்கத்தா.



இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது

IM-251-TM




மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள லிப்டன்ஸ் தேயிலை பெண் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.




# லிப்டன்ஸ் தேயிலை பெண்

நேர்த்தியான இந்திய தேயிலை

LTK 84 G

# அதிருஷ்டம்

வி. ஆர். ராமஸ்வாமி

ராமாவின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாய் வடிந்தது. தன் தகப்பனார் பிழைத்திருந்தால் இந்த மாதிரி நேரிடுமா? எவனெவனையோ வழியில் சிக்கினவனையெல்லாம் வரவழைத்துத் தன்னை அவன் முன் நிற்க வைக்கிறார்களே! சர்வசாக்ஷியான பகவானுக்குக் கண்ணில்லையா? அவர் டாக்டர் சொன்னபடி காலராவைத் தடுக்கும் ஊசி போட்டுக் கொள்ளாமல் அந்த ஊருக்கு ஏதோ கேஸிற்குப் போய் அங்கே கோயில் பிரசாதம் சாப்பிட்டதின் பலனாகக் காலரா கண்டு இரண்டே நாட்களில் இறந்து விட்டார். விதியை வெல்ல யாரால் முடியும்? ஒருவன் எங்கேயாவது எப்படியாவது சாகவேண்டியிருந்தால் அவன் ஆயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்தும் அங்கே வந்து விதி விதித்த வழி சாவான் என்ற சுலோகத்தைத் தான் படித்திருக்கவில்லையா?

கோபாலசாமி முதலியாரின் அருமைப் பெண் ராமா. சிறு வயதிலேயே தாயை இழந்ததால் தகப்பனாரால் மிகவும் செல்லமாய் வளர்க்கப்பட்டவள். முதலியார் தான் சம்பாதித்ததை யெல்லாம், தன்னுடைய நண்பன் சபேசன் சில காலம் ஆடம்பரமாய் நடத்தி வந்த ஒரு பிலிம் கம்பெனியில் போட்டிருந்தார். அவன் திடீரென்று கடன்காரர்களை ஏமாற்றி விட்டுப் பம்பாய்க்குப் போய்விட்டான்.

ராமா தன் பெரியப்பா சுப்பிரமணிய முதலியார் வீட்டிற்கு வந்து சேர்ந்தாள்.

சபேச முதலியார் பம்பாய்க்குச் சென்றதும் தாடி மீசை வளர்த்து "நவாப் கான்" என்ற முகம்மதியராய் விட்டார். பிலிம் கம்பெனியை நடத்துவதை விட்டு நடிகராகிவிட்டார். மற்ற நடிகர்களுக்கு உபதேசம் செய்ததைத் தானே நடத்திக் காட்டினார். முதலில் மைனர் பார்ட்டுகள் நடித்து, கடைசியில் "சேல்ஸ்மென்" என்ற நவீன ஹிந்தி 'காமிக்'கில் பெரிய பெயரெடுத்தார். ஆனால் அவருக்கு ஒரே ஒரு விசனம் மனதைத் துன்பப்படுத்திக் கொண்டிருந்தது. தான் 'இன்ஸால்வெண்டு' மனு கொடுத்து மோசம் செய்த கோபாலசாமி முதலியார் பணமுடையால் அவஸ்தைப்படுவாரே என்று வருந்தினார். அவருடைய நிலைமையை விசாரித்து உதவி செய்ய விரும்பினார்.

ஒரு நாள் தெருவில் யாரோ ஒருவன் தன்னை நிறுத்தி, "மன்னிக்க வேண்டும். நீர் எப்பொழுது கோயமுத்தூரிலிருந்து வந்தீர்? உமது பிலிம் கம்பெனி என்ன ஆகிவிட்டது? நீங்கள் எப்பொழுது முகம்மதியர் ஆனீர்?" என்று கேட்டான்.

நவாப் தன் குட்டு வெளியாய் விடுமே என்று வடநாட்டில் தமிழில் பேசுபவனை யாரென்று அறிய உற்றுப் பார்த்தான்.

"ஓ, ராமசாமியா? இங்கே என்ன செய்கிறாய்?" என்று விசாரித்தான். ராமசாமி தான் அண்ணனுடன் மெஷின்கள் செய்யும் கம்பெனி நடத்துவதைச் சொல்லி, தான் தனியாய் வியாபாரம் நடத்த விரும்புவதாகவும், அதற்கு சபேசனைப் போல ஒரு 'சேல்ஸ்மென்' இருந்தால் வியாபாரமாகுமோ என்ற பயமில்லை என்றும் கூறினான். மேலும் தான் நிலம் உழவும், தண்ணீர் இழுத்துப் பாய்ச்சவும் எண்ணெய் எடுக்கவும் இந்த மெஷின்களையே உபயோகிக்கக் கருவி செய்ய டிஸைன்கள் தயாரித்திருப்பதாகவும் கூறினான். சபேச முதலியார் மருமகனின் ஜாகைக்குப் போய் அவன் டிஸைன்களைப் பார்த்து நம்பிக்கையுற்றார். அவற்றை விற்கும் ஏஜெண்ட் வேலையையும் ஒப்புக்கொண்டார். உலகமே ஒரு நாடகமேடைதானே என்று நினைத்தார்.

ராமசாமி தன்னுடைய அண்ணன் கம்பெனியிலிருந்து விலகிக் கொண்டு தனியாக வியாபாரம் நடத்தினான். லக்ஷக் கணக்காய் லாபம் வந்தது.

ஒரு நாள் ராமசாமி மாமாவைப் பார்த்து, "நீர் நிஜமாக முகம்மதியராய் விட்டீரா?" என்று கேட்டான். அதற்குச் சபேசன் (நவாப்) "நான் பல பாஷைகளைக் கற்றவன். சாகும்பொழுதுதான் கடவுளைப் பற்றிச் சிந்திக்கப் போகிறேன். God, அல்லா, ஈசுவரா என்று எல்லா நாமங்களாலும் கூப்பிட்டுச் சாவேன். நான் எந்த மதஸ்தனா யிருந்தாலென்ன? அதிருக்கட்டும், நீ கல்யாணம் செய்து கொள்வதுதானே? யாருக்காக இந்தப் பணமெல்லாம் சம்பாதிக்கிறாய்?" என்றார். ராமசாமி, "அந்த யோசனை உண்டு. பிடித்தமான பெண் அகப்படவில்லை" என்றான். அவன் மாமா, "எனக்குத் தெரிந்த கண்ணைப் பறிக்கும் அழ

குடைய ஒரு பெண் இருக்கிறள். நான் கோயமுத்தூர் சென்று பார்க்கவேண்டும். அவர்களைப் பார்த்துப் பல வருஷங்களாகி விட்டன" என்றார்.

சபேசன் கோயமுத்தூர் சென்று கோபாலசாமி இறந்து விட்டதையும், ரமா பெரியப்பாவிடம் இருப்பதையும் அறிந்து ஒரு குடுகுடுப்பாண்டிக்கு ஐந்து ரூபாய் தந்து அவன் வேஷத்தைத் தான் அணிந்து நல்வாக்கு சொல்லி ரமாவுக்குத் தைரிய மூட்டி பம்பாய்க்குத் திரும்பி வந்து சுப்பிரமணிய முதலியாருக்கு, ரமாவுக்கு ஒரு வரன் தேடியிருப்பதாகக் கடிதம் எழுதினர். முதலியாரும் ஏதோ ஒரு வரன் அகப்பட்டதே, தம் பொறுப்பு தீர்ந்தால் நலமென்று ஒத்துக்கொண்டார். உலகப் போக்கை நன்கறிந்த சபேசனும் மருமகன் ஒரு ஏழை குமாஸ்தா வென்றே கடிதத்தில் எழுதினர். பணக்காரனென்றால் சுப்பிரமணிய முதலியார் அவனைத் தன் பெண்ணுக்கே பார்க்க விரும்புவாரல்லவா?

* * *

சுப்பிரமணிய முதலியாருக்கு ஆண் குழந்தை இல்லை. சுந்தரி, லக்ஷ்மி, பத்மா என்று மூன்று பெண்கள் 'க்யூ' வரிசையில் கல்யாணத்திற்குத் தயாராக இருந்தார்கள். ஆனல் அவர்கள் தயாராயிருந்தாலும், பார்க்க வந்தவர்கள் பெண்கள் கறுப்பாகவும் பருமனாகவும் இருப்பதைக் கண்டு தகப்பனர் கொடுக்க வந்த வர தட்சிணை கூட வேண்டாமென்று சொல்லிப் பயந்து ஓடி விட்டார்கள். மேலும் பார்க்க வந்தவர்களெல்லாம் ரமாவைப் பார்த்து, "இவள் யார்?" என்று விசாரித்தது சுப்பிரமணிய முதலியார் மனைவிக்குப் பெரிய தொந்தரவாயிருந்தது. விசாலாட்சியம்மாள் தன் கணவன் சுப்பிரமணிய முதலியாரைப் பார்த்து, "ரமாவிற்கு முதலில் கல்யாணம் செய்து விடுங்கள். உங்கள் தமையனர் குழந்தைக்கு முதலில் கல்யாணம் செய்வது உங்கள் கடமையல்லவா?" என்று சொன்னுள். சுப்பிரமணிய முதலியாரும் தன் மனைவியின் கருத்தை அறிந்து கொண்டார். ரமாவின் இயற்கை யழகு, எல்லாருடைய திருஷ்டியையும் இழுக்கச் செய்தது மன்றித் தம் பெண்களின் லட்சணக் குறைகளையும் எடுத்துக் காட்டியதை அவர் அறிவார்.

ரமா ஒரு நாள் மாலை தோட்டத்தில் வசந்தத்தில் மலர்ந்த மல்லிகை, ரோஜா, முதலிய பூக்களின் அழகைப் பார்த்துக் கொண்டிருக்கையில் வேலைக்காரக் கந்தன் ஓடி வந்து, "யாரோ வருவாங்களாம். அம்மா உங்களைச் சீக்கிரம் பட்டுப் புடவை உடுத்திப் பூ சூட்டிக் கொள்ளச் சொல்லிச்சு. ஏன் அம்மா அழறீங்க? உங்களுக்கு நல்ல அதிர்ஷ்டமிருக்குது. நல்ல புருஷன் வருவாங்கோ என்று குடுகுடுப்பாண்டி கூடச் சொன்னுனே!" என்று தைரியம் ஊட்டினன்.

ரமா கண்களைத் துடைத்துக் கொண்டு உடுத்தும் அறைக்கு ஓடி ஆடை மாற்றிக் கொண்டாள். ஏதோ மோட்டார் வரும் சத்தம் கேட்டது. வாசலில் ஓர் அழகிய சிறு வெள்ளை மோட்டார் வந்து நின்றது. அதிலிருந்து ஐம்பது வயதுள்ள ஒரு பெரியவரும், இருபத்தைந்து வயதுள்ள ஓர் அழகிய வாலிபனும் இறங்ினதை ரமா ஜன்னல் வழியாய்ப் பார்த்தாள். கந்தன் சொன்னது நிஜமாகுமா? குடுகுடுப்பாண்டியின் வாக்குப் பலிக்குமா?

* * *

பட்டாடை உடுத்திக்கொண்டு, வந்தவர்களுக்குத் தன்னைக் காண்பித்துக் கொண்டாள். ராமசாமி தன்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தது ரமாவுக்குச் சந்தோஷத்தை யளித்தது. அவன் போன பின்பு பெரியப்பாவும் பெரியம்மாவும் பேசிக்கொண்டதிலிருந்து அவன் அதிகம் படிக்கவில்லை, இண்டர்மீடியட்டில் தவறினவன் என்றும் அவனுடைய தமையனர் கம்பெனியில் ஒரு குமாஸ்தாவாக வேலை செய்கிறு னென்றும் அறிந்தாள். "ஏழையாயிருந்தாலென்ன? அதிகம்



படிக்காமலிருந்தாலென்ன? அன்பிருந்தால் போதாதா?" என்று நினைத்துச் சந்தோஷமடைந்தான்.

* * *

சுப முகூர்த்தத்தில் கல்யாணமாயிற்று. கல்யாணமான ரமாவைப் புருஷன் ராமசாமி கூடவே அழைத்துச் சென்றுவிட்டான். ஆறு மாதங்கள் சென்றன. சுந்தரிக்கும் கல்யாணமாகிவிட்டது. அவளுடைய புருஷன் பம்பாயில் நவபாரத இன்ஷியூரன்ஸ் கம்பெனியில் ஒரு ஆர்கனைசர். பெயர் சிவசங்கரன். மாமனார் தீபாவளிக்கு வரச் சொன்னார். அதற்கு அவன், "இங்கே வேலையை விட்டுவிட்டு வருவதற்கில்லை. பிரமோஷன் கிடைக்கும் சான்ஸ் போய்விடும். வீடு ஓட்டை. மழை பெய்தால் மேலிருந்து தண்ணீர் கொட்டுகிறது" என்று எழுதினான்.

அடுத்த நாள் பத்திரிகையில், "பம்பாயில் தமிழர் இருந்த வீடு இடிந்து விழுந்தது!" என்ற தலைப்பைப் படித்தார். அதில் குறிப்பிட்டிருந்த தெரு, வீட்டின் நம்பர் எல்லாவற்றையும் பார்த்ததும் சுப்பிரமணிய முதலியார் பத்திரிகையை மறைத்து வைத்துவிட்டு ராமசாமிக்கு ஒரு தந்தி கொடுத்தார். போய் விசாரிக்கும்படி தந்தி அடித்தார்.

மாலை ஏழு மணிக்கு, "எல்லாரும் க்ஷேமம் என்று கடிதம் எழுதியிருக்கிறார்" என்ற தந்தி ராமசாமியிடமிருந்து வந்தது. அடுத்த நாள் காலை சுப்பிரமணிய முதலியாருக்குச் சிவசங்கரனிடமிருந்து கடிதம் வந்தது.

"மாமனாருக்கு விஞ்ஞாபனம்;

சாயந்திரம் சுமார் மூன்று மணிக்கு ராமசாமி வந்து அவசரமாக ஒரு 'பிரபோஸல் பாரிஸி' எடுக்கச் சொல்லித் தனக்காக எழுதச் சொன்னான். நான் எவ்வளவுக்கு செய்கிறாய்? குறைந்தது ஐயாயிரத்திற்காவது செய்" என்றேன் நமது வழக்கப் பிரகாரம். அதற்கு அவன் "பூ! நான் அண்ணாவோடு இல்லை. தனியாய்க் கம்பெனி நடத்தி வருகிறேன். பஞ்சத்தில் பாலுக்குப் பதிலாக எமல்ஷன் செய்யவும், உலர்ந்த நிலங்களில் ட்யூப் கிணற்றின் மூலம் ஓர் அறுவடை நன்செயில் இரண்டு அறுவடை செய்யும்படி நீர் பாய்ச்சவும், நூல்கள் தறிகள் ஓட்டவும் என் மோட்டார்களை உபயோகப் படுத்தலாம். மேலும் ஜோஸியன் எனக்குச் சமீபத்தில் ஒரு கண்ட மிருப்பதாகச் சொல்லுகிறான். ஒரு லட்சத்திற்கு இன்ஷ்யூர் செய்ய விரும்புகிறேன்" என்று சொல்லி மேஜைமேல் நூறு ரூபாய் நோட்டுகள் கொண்ட ஒரு பெரிய கத்தையை வைத்தான்.

நான் என் ஆச்சரியத்தை வெளிக்குக் காட்டாமல் "என் கம்பெனியில் இருபத்தைந்து ஆயிரத்திற்குமேல் ஒருவர் இன்ஷ்யூர் செய்வதற்கு அனுமதியில்லை" என்று சொல்லி அதற்கு வேண்டியதை எடுத்துக் கொண்டு மீதியை அவனிடம் கொடுத்துவிட்டு, சுபஸ்ய சீக்கிரமென்று நினைத்துப் பிரபோஸலை எழுதி முடித்து அவனிடம் கையெழுத்து வாங்கி, நானும் சாக்ஷியாகக் கையெழுத்திட்டு அவனை 'எனக்குத் தெரிந்த' டாக்டரிடம் அழைத்துச்சென்று பரீக்ஷை செய்வித்து, பாங்கியில் பணத்தைக் கட்டிவிட்டு வீட்டிற்கு அதாவது வீடு இருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தோம். வீடு இடிந்து விழுந்திருந்தது. இரண்டு மூன்று நாள் நல்ல மழை பெய்து மேலிருந்து தண்ணீர் கசிந்து அப்படி நேர்ந்தது. ஏதோ உயிர் தப்பினேன். எல்லாம் அதிர்ஷ்டம்; இல்லை; ரமாவின் புண்ணியம் என்னைக் காப்பாற்றியது. எனக்கு இன்ஸ்பெக்டர் வேலை கிடைப்பது நிச்சயம்."

சிவசங்கரன்.

'நல்லது செய்தவன் எவனும் அதனால் கஷ்டப்பட மாட்டான்' என்ற பகவத் கீதை சுலோகம், முதலியார் கீதை படித்திருந்தால் இந்தச் சமயம் அது அவருக்கு ஞாபகம் வந்திருக்கும்.



# கெட்டிக்காரப் பெண்

ரா. வீழிநாதன்

மார்த்தாண்டன் என்பவன் பாண்டிய நாட்டு இளவரசன். அவன் மிகவும் புத்திசாலி. தன் புத்திசாலித் தனத்திற்கேற்ற ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று அவன் விரும்பினன். எவ்வளவோ பெண்களைப் பார்த்தான். ஒரு பெண்ணாவது அவனுக்கேற்றவளாக அவனுக்குப் படவில்லை.

அவன் ஒருநாள் அழகர் கோயிலுக்கு அடுத்த கிராமத்திலே 'வள்ளியம்மை' என்று ஒரு குடியானவப் பெண் இருக்கிருள் என்று கேள்வியுற்றான். உடனே அப்பெண்ணின் தந்தையைத் தனது அரண்மனைக்கு அழைத்து வரும்படி ஏவினன். குடியானவன் வந்ததும், அவனிடம் இரண்டு அழுகிய முட்டைகளைக் கொடுத்து "உன் பெண் மிகவும் புத்திசாலி என்று கேள்விப்பட்டேன். இம்முட்டைகளைக் குஞ்சு பொரிக்குமாறு அவளைச் செய்யச் சொல்" என்று கூறினன்.

குடியானவன் அரச குமாரனின் கட்டளையைக் கேட்டுப்பயந்தவண்ணம் தன் குடிசைக்குத் திரும்பித் தன் பெண்ணிடம் விஷயத்தைத் தெரிவித்தான்.



பெண், "கவலைப்படாதீர்கள் அப்பா! நான் சொல்கிறபடி செய்யுங்கள். அரச குமாரன் வேட்டையாடப் போகும் பொழுது, அவன் கண்ணில் படும்படியாக இந்த வறுத்த நிலக்கடலைப் பருப்பை விதையுங்கள். அவர், 'இது முளைக்குமா?' என்று கேட்டாரானல், நீங்கள் 'இந்தக் கடலையை முளைக்க



வைத்து விட்டீர்களானல் என் பெண்ணும் முட்டையைக் குஞ்சு பொரிக்க வைத்து விடுவதாகச் சொல்கிறாள்' என்று அவரிடம் சொல்லுங்கள்" என்றாள்.

மறுநாள் குடியானவன் அவ்வாறே செய்தான். அரச குமாரன் அப் பெண்ணின் புத்திசாலித்தனத்தை மனதிற்குள் மெச்சிக்கொண்டான். இருந்தாலும் மறுபடியும் பரீட்சிக்க எண்ணி, ஒரு நெய்க்கரண்டியைக் குடியானவன் கையில் கொடுத்து, "சமுத்திர ஜலத்தை எல்லாம் இதனல் இறைத்துவிட வேண்டுமென்று அவளிடம் சொல்" என்றார்.

மறுநாள் குடியானவன் அரண்மனையை அடைந்து அரச குமாரனிடம் "என் மகள் நெய்க் கரண்டியினல் சமுத்திர ஜலத்தை இறைத்து விடுகிறேன் என்று சொல்கிறாள். ஆனல் ஆறுகளெல்லாம் சமுத்திரத்தில் வந்து கலக்கின்றனவாம். ஆகையால் இந்தப்

பஞ்சைக் கொண்டு ஆறுகளின் ஜலம் சமுத்திரத்தில் விழாதபடி அணை போட்டுத் தருமாறு உங்களிடம் சொல்லச் சொன்னான்" என்று கூறிக் கொஞ்சம் பஞ்சை அரசகுமாரனது முன்னிலையில் வைத்தான். அரச குமாரன், அக் குடியானவப் பெண்ணின் புத்திசாலித் தனத்தில் மகிழ்ச்சி கொண்டு அவளைக் கல்யாணம் செய்து கொண்டான்.

சில தினங்களுக்கப்புறம் மறுபடியும் அவளைப் பரீட்சிக்க எண்ணி, அவளைத் தள்ளி வைத்து விட்டதாகவும் அவள் பிறந்த வீட்டுக்குப்போய் விடவேண்டுமென்றும் பயமுறுத்தினான். அவள் பயந்துவிட்டாள். இருந்தாலும் துணிச்சலாக, "எனக்குப் பிடித்த வஸ்து எதையாவது நான் எடுத்துப் போகலாமா, கூடாதா?" என்று கேட்டாள். "உனக்குப் பிடித்தது எது வேண்டுமானாலும், நீ எடுத்துச் செல்லலாம்" என்றான் அரசகுமாரன்.

புத்திசாலியான அப் பெண், அவனுக்குத் தூக்க மருந்தைக் கொடுத்து, அவனைத் தூங்க வைத்து அவனையே தன் குடிசைக்கு எடுத்துச் சென்றாள்.



தூங்கி எழுந்ததும் அரசன், குடிசையைப் பார்த்து விட்டு "நான் இங்கே எப்படி வந்தேன்?" என்றான். அவனது தலைமாட்டில் உட்கார்ந்திருந்த அவள், "உனக்குப் பிடித்த வஸ்துவை எடுத்துச் செல் என்று நீங்கள்தானே சொன்னீர்கள்! எனக்குப் பிடித்தவர் நீங்கள்தான்! அதனால்தான் உங்களை எடுத்து வந்தேன்" என்று சொன்னாள். அப் பெண்ணின் புத்திசாலித் தனத்தை மெச்சி, அரச குமாரன் அவளை மிக அன்பாக நடத்தி வந்தான்.

## 1946-ம் வருஷத்துக் "கல்கி" சிறு கதைப் போட்டி

### பரிசு ரூ. 1000

### முதல் பரிசு ரூ. 500 ; ஐந்து பரிசுகள் ஒவ்வொன்றும் ரூ. 100

1. இந்தப் போட்டிக்கு அனுப்பும் கதைகள், தமிழ் நாட்டு மக்களின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட புதுக் கற்பனைகளாக இருக்க வேண்டும்.

2. கதையின் நீளம் "கல்கி"யில் ஐந்து பக்கம் முதல் பன்னிரண்டு பக்கத்துக்குள் அடங்குவதாயிருக்க வேண்டும்.

3. ஒரே ஆசிரியர் இரண்டு கதைகள் அனுப்பி வைக்கலாம். அதற்குமேல் அனுப்பக் கூடாது.

4. சென்ற 1945-ம் வருஷத்துப் போட்டிக்கு அனுப்பிப் பரிசு பெறாத கதைகளைத் திரும்பவும் அனுப்பக் கூடாது. அம்மாதிரி கதைகள் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படமாட்டா.

5. 1946-ம் வருஷம் செப்டம்பர் 30-க்குள் போட்டிக் கதைகள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும். கவரின்மேல் "சிறு கதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.

6. எல்லாவற்றிலும் சிறந்ததென்று பஞ்சாயத்தார் கருதுகிற கதைக்கு முதல் பரிசு ரூ. 500 ம், அடுத்தபடியான ஐந்து கதைகளுக்கு ஒவ்வொன்றுக்கு ரூ. 100 வீதமும் அளிக்கப்படும். பரிசு பெற்ற கதைகளின் 'காபிரைட்' உரிமை "கல்கி" காரியாலயத்தைச் சேர்ந்தது.

7. பரிசு பெறாத கதைகளில் பிரசுரத்துக்குத் தகுதியான கதைகள் பிரசுரத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும். அவற்றுக்கு ஆசிரியர் உசிதப்படி சன்மானம் வழங்கப்படும்.

8. முதற் பரிசு பெற எந்தக் கதையும் தகுதியற்றதென்று பஞ்சாயத்தார் கருதினால், பரிசுத் தொகை பஞ்சாயத்தாரின் உசிதம்போல் பிரித்துக் கொடுக்கப்படும்.

9. இந்த போட்டி சம்பந்தமான விதிகளை மாற்றவும் திருத்தவும் "கல்கி" ஆசிரியருக்கு உரிமை உண்டு.

10. சந்தேகம் ஏற்படும் எந்த விஷயத்திலும் "கல்கி" ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

மானேஜர் : "கல்கி", கீழ்ப்பாக்கம், சென்னை

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

# பருக்களைப் போக்கி

## முகவசீகரத் தையடையுங்கள்







மிருதுவானதும் மழமழப்பானதும் பருக்களில் லாததுமான முகம் அழகுக்கோர் அத்தாட்சி. பலருடன் பழகும்போது இதுதான் முதல் நல்லபிப்பிராயத்தை உண்டுபண்ணக் கூடியது. பருக்கள், தவிர்போன்ற சருமத்தைக் கரடு முரடாக்கி அதில் கரும் புள்ளிகளைத் தோற்றுவித்து முகவசீகரத்தைக் கெடுத்துவிடும். முகம் பருக்களால் விகாரமடைந்தால் சிங்காரங்களும் சிகை யலங்காரங்களும் நேர்த்தியான உடைகளும் சோபிக்க மாட்டா. இப்பொழுது நீங்கள் பருக்களை சாஸ்திரிய முறையில் போக்கி முகவசீகரத்தை யடையலாம்.

**பருக்களுக்கும் சினைப் புகளுக்கும் சாஸ்திரிய முறையான சிகிச்சை.**

ப்ளோரேஸோன் பருக்களுக்கும் சினைப்புகளுக்கும் கை கண்ட ஔஷதம். தவறாமல் உபயோகித்து வந்தால் அது பருக்களைப் போக்கி வராமலும் தடுத்து சருமத்தைப் பட்டுப் போல் மிருதுவாயும் மழமழப் பாயுமாக்கும். பரு முதலிய சரும கோளாறுகளுக்குக் காரண மான கிருமிகள் தைலக் கோளங்களில் விருத்தியாகாமல் தடுத்து விடுகிறது. தவிரவும் ப்ளோரேஸோன் சருமத் துக்கு வெண்மையைக் கொடுத் து முகத்துக்குப் புது அழகை யும் சோபையையுமளிக்கிறது.

ப்ளோரேஸோன் லோஷனாக வும் கெட்டியாக்கப்பெற்ற க்ரீ மாகவும் கிடைக்கும். இரண்டும் பருக்களுக்கு ஏற்றவைதான். ப்ளோரேஸோன் எல்லா ஸ்டோர்களிலும் கிடைக்கும்.
லோஷன் பாட்டில் 1க்கு ரூ. 4/4
க்ரீம் ஜாடி 1க்கு ரூ. 5/8

*கிடைத்துள்ள பல நற்சாட்சிப் பத்திரங்களிலொன்று*



ப்ளோரேஸோன் உபயோகித்து வந்ததால் என் முகம் தெளிவுற்று விளங்குகிறது. பருக்களும், கரும் புள்ளிகளும் மறைந்துவிட்டன.

கார்த்தி குமார், 14-ம் படை I.C. (I), 83, I.F.C.V., 12 A.B.P.O.

# ப்ளோரேஸோன்-முகத்தை சோபிக்கச் செய்கிறது

ஆடவரும் பெண்டிரும் உபயோகிக்கலாம்.

உங்கள் ஸ்டோர்சில் ப்ளோரேஸோன் கிடைக்காவிட்டால் கீழ்கண்ட விலாசத்துக்கெழுதவும்:
ப்ளோசீ லிமிடெட், தபால் பெட்டி நெ. 875, பம்பாய் 1.

FP 19 Tamil.

விநியோகஸ்தர்கள் :
**விஜயா டிரேடிங் ஏஜென்ஸி**
2/500, தங்கசாலைத் தெரு, பார்க் டவுன், மதராஸ்

சென்னைக்குப் பிரதம ஸ்டாக்கிஸ்டுகள் :
**எம். கே. ஏ. & கம்பெனி**
2/500, தங்கசாலைத் தெரு, பார்க் டவுன், மதராஸ்

